உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை

# குமரகுருபரன்



மலர் 18 | பிலவங்க ஸு ஆனித் திங்கள் 1ம்வ [15–6–67] | இதழ் 6

## முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

### உ ரை ந டை

பாலகவி வயிநாகரம்,

**திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**

தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 5-ன் தொடர்ச்சி)

கருவீற் றிருந்த பெருங்கருணை
கடைக்கண் பொழிய வீற்றிருக்கும்
கடவு ள்நீயே பகிரண்டம்
கண்டா யெனின்வண் டடைகிடப்ப
மருவீற் றிருந்த குழன்மகளிர்
வண்டற் றுறைக்கு யணற்சிற்றில்

மனைகோ லுவது மற்றடிகேள்
வகுக்குந் தொழிற்கு மாறன்றே
குருவீற் றிருந்த மணிமாடக்
கொடிமா நகரந் தொறுமலர்ந்த
கொழுந்தா மரைப்பூங் கோயிலிற்பல
கோடி யுருவங் கொண்டுசெழுந்
திருவீற் றிருந்த சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 81

நிறைந்து தங்கியிருந்த பெரிய அருளைக் கடைக் கண்கள் பொழியும்படி எழுந்தருளியிருக்கின்ற கடவுளாகிய நீ புறத்தே காணப்பெறுகின்ற அண்டங்களைப் படைக்கின்றாயென்றால் வண்டுகள் மொய்த்துக் கிடக்கும் படி நறுமணம் தங்கியிருக்கின்ற கூந்தலையுடைய பெண்களாகிய நாங்கள் விளையாட்டுத் துறைக்கு மணற் சிற்றில் மனைகளைக் கட்டுவது சுவாமி! நீ செய்யும் தொழிலுக்கு மாறுபடுவதாகுமா? நிறம் பொலிந்து விளங்குகின்ற அழகிய மாடங்கள் நிறைந்த பெரிய கொடிகளையுடைய நகரங்கள் தோறும் மலர்ந்த கொழுவிய தாமரைப் பூங் கோயிலில் பலகோடி உருவங்களைக் கொண்டு செழுமையாகிய திருமகள் வீற்றிருந்த சோழ நாட்டையுடையவனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையா திருப்பாயாக. செந்நெல் நிறைந்த வயல்களையுடைய புள்ளூரனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையா திருப்பாயாக.

## சிறுபறைப் பருவம்

ஊற்றும் பசுந்தே னுவட்டநெட் டிதழ்விரியும்
ஒண்காந்தண் முச்சியுச்சி
ஒருவனீ மும்முதற் கடவுளு மிளைப்பாற
உலகெலாந் தலையளித்துப்
போற்றுந் திறத்தினப் பழமறைக் கிழவன்
புரிந்தபகி ரண்டங்கடாம்
புதுக்குவ கடுப்பநெடு வெளிமுகட் டுக்குவிரி
புதுநிலாக் கற்றையிட்டுத்

தூற்றும் பெயர்க்கரு முகிற்படாத் தையும்வெண்
டுகிற்படா மாக்கிவிக்கித்
தொடுகடற் புவனப் பெருந்தட்டொ டண்டச்
சுவர்த்தலத் துக்கும்வெள்ளை
தீற்றுஞ் சுதைத்தவள மாடமலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. 82

ஊற்றுகின்ற பசிய தேன் பெருக்கெடுக்கும் படி நீண்ட இதழ்கள் விரிந்த ஒள்ளிய காந்தட் பூவைச் சூடிய உச்சிக் கொண்டையை யுடைய ஒப்பற்றவனுகிய நீ, பிரமன், விட்டுணு, உருத்திரன் ஆகிய மூன்று முதற் கடவுளரும் இளைப்பாறியிருக்கும் படி விட்டு உலகமெல்லாவற்றையும் பாதுகாத்துப் போற்றும் திறத்தைப் போல அந்தப் பழைய மறைக் கிழவனுகிய பிரமன் படைத்த பகிரண்டங்களைப் புதிதாக்குவதை யொப்ப நீண்ட வான முகட்டுக்கு விரிந்த புதிய நிலாத் தொகுதியை யிட்டு மழைப்பெயலைத் தூற்றுகின்ற பெரிய கரிய மேகமாகிய மேற்கட்டியையும் வெள்ளிய துகில் மேற்கட்டியாகிய ஆக்கிக் கட்டி ஆழமான கடல் சூழ்ந்த பூமியாகிய பெரிய தட்டோடு அண்டப் புறங்களாகிய சுவர்த் தலத்துக்கும் வெண்ணிறத்தைப் பூசுகின்ற சுதை பூசப்பெற்ற வெள்ளிய மாடங்கள் நிறைந்த வேளூரனே! சிறுபறை முழக்கியருளுவாயாக. தென்றமிழ்க் கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவனே! சிறுபறை முழக்கியருளுவாயாக.

விளைக்கும் பெரும்புவன மொக்கக் கரைத்தகடை
வெள்ளஞ் சுருங்கவீங்கி
வேதண்ட மெட்டினெடு முதண்ட கூடத்தும்
விளையாடி யுலகமேழும்
வளைக்குங் கருங்கடல் பெரும்புறக் கடலோடும்
வாய்மடுத் தெதிரெடுப்ப
வருபுனற் காவேரி வளநாட நாடோறு
மதிக்கடவு ளேறியேறி
இளைக்கும் பனிக்கறை முயற்கறை யறக்காலும்
இளநிலா வெள்ளமூழ்கி

எறிதிரைப் பாகீ ரதிப்புனல் குடைந்திடும்
இடைக்கொடி நகிற்கொடியெனத்
திளைக்குந் துகிற்கொடி முகிற்கொடிசெய் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கி யருளே. 83

படைக்கப் பெற்ற பெரிய புவனங்களெல்லாவற்றையும் ஒருசேர அழித்த கடையுழி வெள்ளமுஞ் சுருங்கும்படி பெருகி, எட்டு மலைகளுடன் பழய அண்ட கூடங்களிலும் விளையாடி, ஏழு உலகங்களையும் வளைத்துள்ள கருங்கடல் பெரும்புறக் கடல்களை வாய்மடுத்து எதிரெடுக்கும்படி வருகின்ற நீர் நிறைந்த காவேரி யாற்றின் வளமிக்க நாட்டை யுடையவனே! நாள் தோறும் சந்திரனாகிய கடவுள் ஏறியேறி இளைக்கின்ற பளிங்கறையினது முயலாகிய களங்கம் மறையும்படி வீசுகின்ற இளநிலா வெள்ளத்தில் மூழ்கி, எறிகின்ற அலைகளையுடைய ஆகாய கங்கை நீரில் குடைந்து ஆடும் இடையாகிய கொடியையும் கொங்கையையும் உடைய கொடி போன்ற பெண்ணென்று சொல்லும்படி விளங்குகின்ற துகிற் கொடியை முகிற் கொடியாகச் செய்கின்ற வேளூரனே! சிறுபறை முழக்கி யருளுவாயாக. தென்றமிழ்க் கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவனே! சிறுபறை முழக்கியருளுவாயாக.

---

(தொடரும்)

# கடற்கரைக் கந்தன்

"செந்திலன்பன்"
திரு. எ. ஆர். ராமசுவாமி அவர்கள் பி. எஸ் ஸி.,
சேலம் - 1

(1) கடலலைமோதும் கடற்கரைதனிலே காத்திடநின்றாயோ
முருகா காத்திடநின்றாயோ
கருணைக்கடலென அருளலையாலே அணைத்திடவந்தாயோ
முருகா அணைத்திட வந்தாயோ

(2) திருவடிதொழுதெழும் தொண்டர்தம்துயரைத் துகள் செயவந்தாயோ
முருகா துகள்செய வந்தாயோ
திருப்புகழ்படிப்பவர் பவவினையொழிக்கப் புவனியில்வந்தாயோ
முருகா புவனியில்வந்தாயோ

(3) வேலும்மயிலும் வாழ்க்கைத்துணையென விளக்கிடவந்தாயோ
முருகா விளக்கிட வந்தாயோ
வேண்டுமடியரின் வேட்கையைத்தீர்க்க வேலுடன்நின்றாயோ
முருகா வேலுடன்நின்றாயோ

(4) கதிரவன்வருமுன் கூவியெழுப்பிடும் சேவற்கொடிகொண்டோ
முருகா சேவற்கொடிகொண்டோ
கதிதரும்கந்தன் வருகையைக்காட்டும் கருணைக்கீடுண்டோ
முருகா கருணைக்கீடுண்டோ

(5) வள்ளிதேவானை புறத்தேகொண்டு தோன்றிடுகுணசீலா
முருகா சத்ஜனபரிபாலா
புள்ளிமயில்மேல் ஏறியமர்ந்து ஆடிவருமீசா
திருச் செந்திலம்பதிவாசா

(6) செந்திலன்ப(ன்) உனைப்பாடும் பணியைத் தந்தருள்கதிரேசா
செம்மைசிந்தனை தந்தெனையாளாய் செந்திற்குமரேசா,

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா, நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

மலர் 18, இதழ் 5-ன் தொடர்ச்சி

### The Saiva Path was laid by the Holy Nandi
### நந்தியெம் பெருமானே சிவநெறி வகுத்தனர்

149. சைவசமயத்தனி நாயகன் நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச்சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்துள் ளார்க்கு வகுத்துவைத் தானே.

The Holy Nandi, the acclaimed Master of Saiva Faith
Hath showed as a Way - the Master's way of Redemption
That, the divine Path of Saiva
He did chalk out for those here below
To walk in Sanmarga's trail
And be for ever free.

சைவ சமயத்தின் ஒப்பற்ற நாயகனும் நந்தியே குருவாக வந்து ஆன்மாக்கள் உய்வுபெற ஒரு நெறி வகுத்ததுண்டு; அதுவே, தெய்வச்சிவநெறியாகும்; சன்மார்க்க நெறியாகும்; இவ்வையத்துள்ளோர் உய்யும் வகை அறிவிக்கும் நெறியாகும்.

### To Attune to Infinity is to reach the City of God
### ஒத்துணர்வே ஒல்லையூர் புகுநெறி

150. இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்
பித்தரைக் காணின் நகுமெங்கள் பேர்நந்தி
எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புகலாமே.

This the right Faith, That the true Faith
When my Lord Nandi thus seeth
Mad men in two contend

He smileth in pity
What though the form of Faith?
What though the place of Birth?
— They with mind infinity attuned
Sure enter the City of God.

இதுவே மெய்ந்நெறி; அதுவே மெய்ந்நெறி – என்று இரண்டுபடப் பேசுகின்றவர் பித்தர்; அவரைக்கண்டு நந்தியெம்பெருமான் இரக்கத்தால் நகை செய்கின்றான். எந்நெறியாகிலென்ன; எங்கு பிறக்கிலென்ன - இறையோடு இரண்டறக் கலந்து ஒத்து உணர்வார்கள் எல்லோரும் இறுதிநிலையாம் வீடடைவது உறுதியாகும்.

## Siva is inclusive of Jeeva

## சிவனுக்கு ச்சீவன் இயல்புமுண்டு

151. ஆமே பிரான்முகம் ஐந்தொடு மாருயிர்
ஆமே பிரானுக் கதோமுக மாறுள
தாமே பிரானுக்குந் தன் சிரமாலைக்கும்
நாமே பிரானுக்கு நரரியல் பாமே.

Siva hath faces five
And with Jeeva, His downward looking visage,
He hath faces six in all;
The Lord by Himself All
Weareth the garland of heads
That verily is the Human Aspect of the Divine One.

சிவபிரானுக்கு முகங்கள் ஐந்து; அதோ முகமாகும் உயிர்களை உள்ளிட்டு முகங்கள் மொத்தம் ஆறாகும். தானே யாவுமாயிருக்கும் இறைவனின் தலைமாலை அவனது மனித இயல்பைக்குறிக்கும்.

குறிப்பு: திவ்யாகமத்துள் ஆறாவது முகம் ஒளி மிகுந்ததாயும், பலநிறங் கொண்டதாயும், மறைந்து கீழ்நோக்கி யிருப்பதாகவும் குறிக்கப் பட்டுள்ளது. "இந்த வாயாலே நான், தேவதாஸ்தானம், ஆசனம், யந்திரம், மாலை, நைவேத்தியம், வலிதானம், சாதனம், புரஸ்சரணம், மந்திரசித்தி என்பனபற்றிப் பேசினேன்" இதுவே ஈசான முகம் எனப்படும். இம்முகத்துக்கு பூசைகள் வழக்கமாக செய்யப்படுவதில்லை — Vide Sir John Woodroffe: Sakti & Sataka PP 143 – 44.

(தொடரும்)

# பனங்காட்டூர் பரமன்

திரு. K. N. தேவராஜன் அவர்கள்,
S/o. N. நாராயண ஐய்யர், தா. கி. தேவஸ்தானம்,
திருப்பனங்காடு.

முன்னுரை:—

"அவனருளாலே அவன் தாள் வணங்கி"

*மாணிக்க வாசகர்.*

என்னு மருள் வாக்கிற்கிணங்க கயிலையில் பெருமானுக்கு பணி செய்து வந்த ஸ்ரீ ஆலால சுந்தரர், இறைவன் அருளாலே பூமியில் பிறந்து இறைவனால் தடுத்தாளப்பட்டு, இறைவனைப் பாடித் திரிந்தார். அவர் கண்ணிழந்து, கோல்பெற்று காஞ்சியை அடைந்து, கண்பெற்று, இறைவனை வணங்கி வருகையில், இறைவன் கட்டமுது தந்து தன் சடையில் இருக்கும் கங்கையை பூமியில் பிரவேசிக்கும்படி செய்து அருள்புரிந்த வன் பார்த்தான் பனங்காட்டூர், என்னும் தலம் இன்று திருப்பனங் காடு என்னும் தலமாகும்.

**இருப்பிடம்:—**

இத்தலம், காஞ்சியம் பதிக்கு மேற்கில் சுமார் 9 மைல் கடந்து உள்ளது. நல்ல இயற்கை எழிலோடு கூடியது. அத்தலத் தின் மூலமாக காஞ்சியில் இருந்து வேலூர் செல்லும் பஸ் வசதி யும் அமையப் பெற்றிருக்கிறது. நல்ல வளனோடு கூடியது மாகும்.

தலவிஷேடம்:—

இத்தலம் மிகவும் பழமையானது. பாடல் பெற்றதொண்டை நாட்டு தலங்களுள் ஒன்றாக விளங்குகிறது. இத்தலத்தில், இரண்டு சுவாமி சந்நிதியும், இரண்டு அம்பாள் சந்நிதியும், அமையப் பெற்றிருக்கிறது. தென்னாடு வந்த அகத்தியர், பனங்

காட்டு தம்பிரான் என்னும் பக்தர் ஆத்மார்த்த பூசை செய்து வந்ததைக் கண்டு பலரும் வணங்கும்படி சிவலிங்க பிரிதிஷ்டை செய்யும்படி மண்ணை அகற்றி 9 அடி நீளம் உள்ள பர்வதலிங்கத்தை எடுத்து காட்டி பிரிதிஷ்டை செய்திருக்கின்றார். அதன் பிறகு அவருடைய மகனை புலத்தியர் இமாசலத்தில் இருந்து கொண்டு வந்த கிரியாலிங்கத்தை தென்னாட்டிலேயே பிரிதிஷ்டை செய்ய வேண்டிக் கருதி, அருகில் பாலாற்றங் கரையில் அரசங்குப்பம் என்னும் கிராமத்தில் பிரிதிஷ்டை செய்திருக்கின்றார். பிறகு சோழருடைய ஆட்சி காலத்தில் இரண்டு மூர்த்தங்களையும் ஒரே இடத்தில் பிரிதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. சுந்தரர் பெருமானால் பாடல் பெற்று விளங்குவதுமாகும். நாற்பதுஆண்டுகளுக்கு முன் இத்தலம் திருப்பணி செய்யும் நிலையில் இருந்ததை அறிந்து தேவகோட்டை பெரி. ஏகப்பச்செட்டியார் அவர்களின் தவச்செல்வர்களான பெரி. ஏ. மாணிக்க வாசகஞ் செட்டியார்; பழனியப்பஞ் செட்டியார் ஆகிய சகோதரர்களால் நன்முறையில் பெருந்தொகை செலவிட்டு திருப்பணி செய்யப் பட்டிருக்கிறது. இத்தலத்தில் சுவாமியின் கருவறை இரண்டும் அரை வட்ட வடிவில் அமைந்திருப்பது மேலும் சிறப்பை தருகின்றது. இங்கு இறைவனை வெகுகாலமாக யோகாநந்த முனீஸ்வரர் என்னும் ஓர் தவமுனி, மானசீக பூஜை செய்து வருவதாகவும் தெரிகின்றது. பலகல்வெட்டுக்களும் காணப் படுகின்றன. இத்தலத்தில் அகத்தியரால் பூசிக்கப் பெற்ற மூர்த்தியின் திருநாமம், ஸ்ரீ அமிர்தவல்லி அம்பாள் சமேத ஸ்ரீ தாளபுரீஸ்வர சுவாமியாகும்.

பனங்காட்டீஸ்வரர் என்று வழங்கி வருகிறது. அகத்தியர் பூசித்துச் சென்ற பிறகு புலத்தியர் பூசித்த மூர்த்தியின் திருநாமம், ஸ்ரீ கிருபாநாயகி அம்பாள் சமேதஸ்ரீ கிருபாநாதேஸ்வர சுவாமி ஆகும். தவிரவும் இங்கு அஸ்தீஸ்வரர், புலஸ்தீஸ்வரர் என்று இருமூர்த்தமும், காசி விஸ்வேஸ்வர மூர்த்தியும் பிரிதிஷ்டை செய்யப்பட்டு இருக்கின்றது. மேலும் அப்பர்பெருமான் அவர்களும் திருத்தாண்டகத்தில் காடு என வழங்கும் தலங்களை வரிசைப்படுத்தி பாடி வரும்போது,

"பலர்பாடும் பழையனூ ராலங்காடு பனங்காடு"

என்று சிறப்பித்துப்பாடியுள்ளார். பட்டினத்தடிகளும், அருள்

சோதி வள்ளல் இராமலிங்க அடிகளாரும், பனங்காட்டூரைப் பற்றி புகழ்ந்து பாடி உள்ளனர்.

தலவிருக்ஷம்:-

இத்தலத்திற்கு பனைமரம் விருக்ஷமாக அமைந்துள்ளது. அம்மையப்பனைப்போல் ஆணொன்றும் பெண்ணொன்றுமாக வானோக்கி வளர்ந்துள்ளது.பிறவியாகிய பெருங்கடலைக் கடந்து, இறைவன் திருவடியாகிய கரையை அடைய உயிராகிய மரக் கலத்திற்கு வழிகாட்டும் கலங்கரை விளக்குபோல் அமைந்து, இன்றும் பிரகாசிக்கிறது. அகத்தியர் பூசித்த காலத்தில் இறை வன் ஆராதனைக் காலத்தில் அளவிலா கனிகளை உதிர்த்தன வாம். இன்றும், காலத்தில் இறைவன் ஆராதனைக்கு பனைக்கனி விசேஷமாகக் கொள்ளப்படுகிறது.

தீர்த்தவிஷேடம்:-

அகத்தியர் பூசித்த காலத்தில் இறைவன் திருவருளால் கங்கையானவள் பிரவேசித்து,கோமுகத்தின் வழியாகச்சென்று எதிரில் இருந்த பள்ளத்தாக்கில் தங்கக் கண்டு, அகத்தியர் அத்தீர்த்தத்திற்கு சடாகங்கை என்று குறித்து அக்கரை யிலேயே கங்கையை சிலாரூபமாக பிரிதிஷ்டை செய்திருக்கின் றார். இன்று அத்தீர்த்தம், திருப்பணிச்செய்த செட்டியார் அவர் களால் நாற்புறமும் அழகிய கட்டிடத்துடன் தெப்பமோடும் திருக்குளமாக திகழ்கிறது. பிரதிவருடமும் மாசிமகத்தன்று அத்தீர்த்தத்தில் இறைவனுக்குத் தீர்த்தவாரியும் மறுநாள் தெப் பமும் அழகாக நடைபெறுகிறது.

இறைவன் ஆடல்:-

தலங்கள் தோறும் சென்று இறைவனைக் கண்ணாரக்கண்டு வாயாரப்பாடிவரும் சுந்தரர் பெருமான் மிகுந்த களைப்போடும் பசியோடும், தனதெல்லையில் வருவதைக்கண்ட தாலநகர் வாசன், தன் அடியார் துயர் தாங்கொணாது தனது யோக நிலையையும், சடைதரித்த திருமேனியையும் விட்டுத் தள்ளாடி, தடியூன்றி தளர்ச்சியுற்று பழுத்த ஓர் வயோதிக உருவம் தாங்கி பூமியின் கண் பாதசாரியாக நடந்து வந்து நல்ல தூய் மையான மணமிக்க தயிர்சாதமாகிய கட்டமுது மூட்டை

ஒன்றை சுந்தரர் பெருமானிடம் தந்து 'இதை உண்டு உன் களைப்பைத் தணித்துக்கொள்வாய்' எனக்கொடுத்தார். தந்தவர் இறைவன் என்றறியாத சுந்தரர்பெருமான், 'பெரியீரே! இது சமயம் சுற்றிலும் எங்கு பார்த்தாலும் கண்ணுக்கெட்டிய தூரத்தில் நீர் இல்லாமல் இருக்கின்றதே, பைசாசுகள் கூட இப்படிப்பட்ட இடத்தில் உணவு கொள்ளாவே' என்று கூறி

"நீர் இல்லா இடந்தன்னில் நீர் அமுது அளித்தல் நீதியோ"

என்று சொல்ல, எதிரே நின்ற பெரியோர் நகைப்புடன் 'சுந்தரா'! என்று அழைத்து

"நீர் வந்த இடந்தன்னில் நீரின்று போகுமோ"

எனச் சொல்லி தன் காலால் சிறிது மண்ணை அகற்ற இறைவன் திருஉளமறிந்த கங்கை அங்கு பிரவேசிக்க அதைக் கண்டு சுந்தரர் பெருமான் ஆனந்தக் கடலில் ஆழ்ந்து விழிக்கும் தருணத்தில் அமுதளித்த அரனை பெரியோரைக் காணவில்லை.அப்போது வந்தவர் இறைவன் என்று நன்கு உணர்ந்த சுந்தரர் கோயிலை அடைந்து இறைவனைத் தரிசிக்கும் காலத்தில் இறைவன் இறைவியோடு கூடி விடை மீதமர்ந்து காட்சி அளிக்க, அதைக் கண்ட பெருமான் இறைவனை வணங்கிக் கைகுவித்து நின்று

"விடையின் மேல் வருவானை
வேதத்தின் பொருளானை
யடையிலன் புடையானை
யாவர்க்கு மறியொண்ணா
மடையில் வாளைகள் பாயும்
வன்பார்த்தான் பனங் காட்டூர்ச்
சடையிற் கங்கை தரித்தானைச்
சாராதார் சார்பென்னே"

எனத் தொடங்கி பத்து பதிகங்களால் இறைவனை வணங்கி அருள் பெற்றார். இறை அருளால் இறைவனை வேரிடத்தில் காண்பாராகி செல்லலானார்.

சுந்தரர் தீர்த்தம்:-

சுந்தரர் பெருமானுக்கு இறைவன் காட்டிய தீர்த்தமே சுந்தரர் தீர்த்தம் எனப்பெயர் பெற்றது. மற்றும் இத்தீர்த்தம்

பெரிய அளவில் இல்லாமல், காலால் மணலைத் தள்ளிய அளவில் சிறிய தீர்த்தமாக இருப்பதனாலும் எடுக்க எடுக்க பெருகிக் கொண்டே இருப்பதனாலும் வழக்கியலில் இவை ஊற்றங் குழி என்றும் வழங்கி வருகிறது. இத்தீர்த்தத்தின் தனிச்சிறப்பு மிகவும் விந்தையானது. சிறிய அளவில் தான் தீர்த்தம் இருக் கும். பெரிய பாத்திரத்தில் எடுக்க முடியாத நிலையில் இருந்து கொண்டு, கோடைகாலங்களில் சுற்றிலுமுள்ள கிராமங்களுக்கு ஊறுணியாக இருந்து எடுக்க எடுக்க அதன் நீர்மட்டம் குறை யாமல் இருந்து கொண்டே இருக்கும். நீர் எடுக்காமல் இருந் தாலும் நீர்மட்டம் அதிகரிப்பதும் இல்லை. அத்தலத்தில் எங்குமே ஐந்து கெஜத்திற்குள் நீர் கிடைப்பது இல்லை. அந்நிலையில் அத் தீர்த்தம் உள்ள இடமோ மிகவும் மேடான இடமாக அமைந் திருக்கிறது. இத்தீர்த்தத்தில் கோடையிலும் மேலேயே நீர் ததும்புவது இன்றும் காணலாம். இத்தலத்து பெருமானுக்கு மாசிமகத்தன்று தீர்த்தவாரியும், அவரோகணமும் நடைபெறு கிறது. நான்காம்நாள் திருவிழாவில், தீர்த்தம் உள்ள இடத்தில் சுந்தரர் பெருமானுக்கு அபிஷேக, அலங்கார ஆராதனைகள் நடத்தி கட்டமுது பிரசாதம் வழங்கி இரவு இறைவன் இடப வாகனகாட்சி அளித்தலும் தேவாரப்பாராயணமும் நடத்தி சோடச உபசார தீபாராதனைகள் நடைபெற்று ஐய்யனும் அடி யாரும் வீதி உலாக்காட்சி நடத்தப்பட்டு வருகிறது.

முடிவுரை:—

அடியார் உளமறிந்து அமுதூட்டும் அருளாளனாகிய ஸ்ரீ பனங் காட்டூர் பரமனை ஸ்ரீ தாளபுரீஸ்வரனை சார்ந்தவர்களுக்கு அல்லலாகிய அரும்பிணி சாராமல் தொலைந்து போம் என்பது உண்மை. இவற்றையே சேக்கிழார் பெருமானும் தமது நூலா கிய தொண்டர் புராணத்தில் விரித்துக் காட்டுகின்றார்.

"செல்வமல்கு திருப்பனங்காட்
டூரிற் செம்பொற் செழுஞ்சுடரை
அல்ல லறுக்கும் அருமருந்தை
வணங்கி அன்பு பொழி கண்ணீர்
மல்க நின்று விடையின்மேல்
வருவார் எனும் வண்தமிழ்ப்பதிகம்

நல்ல இசையினுடன் பாடிப்
போந்து பிறவும் நண்ணுவார்.

என சிறப்பித்துக் கூறுகின்றார் பெரிய புராணத்தில். ஏயர் கோன் கலிக்காம நாயனார் புராணத்துள் சுந்தரரைப் பற்றி கூறுமிடத்தில் இப்பாடல் அமைந்துள்ளது. மற்றும் இப்பாடலுக்கு முன் பாடலாகிய 193-வது பாடலில் இறைவன் நிலவி நிற்கும் பதிகள் பல இருப்பினும்

"மாடம் நெருங்கு வன்பார்த்தான்
பனங் காட்டூரில் வந்தடைந்தார்"

எனக் குறிப்பிடுகின்றார். ஆகவே நாமும் வன் தொண்டரின் வாக்கிற் கிணங்க பனங் காட்டூர் பரமனை, சார்ந்து பாடிப் போந்து இறை அருளுக்கு ஆளாவோமாக.!!

"பனங் காட்டூர் மேவும் பனங்காட்டு நாதா
வனங்காட்டு அமுதவல்லி மன்னு"

— உமாபதிசிவம்

---

# "ஊமை தந்த கவி"

திரு. L. சங்கரகுற்ருலம் அவர்கள்,
*நிர்வாக அதிகாரி, திருமருகல்.*

குழந்தை - அதுவும் பிஞ்சுப் பருவம் - பாவம், பேச இயலாததாம். குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள் மழலைச் சொல் கேளாதவர் என்ற வாக்குக்குப் புறம்பானவர்கள் அதை ஈன்றெடுத்தவர்கள். வேண்டிப் பெற்றபிள்ளை! ஊழ்வினைப் பயன்போலும், ஊமை. பெற்றவர்கள் மனம் என்ன கல்லா! உள்ளம் உருகினர்.

கவுரியர்க்கு பால் சுரந்தளித்தவள் நாமம் கொண்டவள் குழந்தையின தாய் - சிவகாம சுந்தரி. அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றுமே! அக்கலியுக வரதன் பெயர் கொண்டவர் குழந்தையின் தந்தை - சண்முக சிகாமணி.

இவர் குலமோ கவிராயர் குலம். பழுத்த சைவம். பழைய அடியாருள் ஒருவர். வசித்ததலமோ புவியின (ஸ்ரீ)வைகுண்டம். இத்தலம் அமையப்பெற்ற இடமோ 'பொருநை'யின் கரை. இப்பொருநை பிறந்த இடமோ தமிழ் முனிவன் வாழ்ந்த இடம். தவழ்நது செல்லும் இடமோ தமிழ்க் கன்னி தவழ்ந்த இடம். சைவததிற்கு அன்றும் இன்றும் என்றும் ஏற்றமளிக்குமிடம். ஆகா! இத்துணை பேறு வாய்ந்த, பெருமை மிகுதலம், சீலம் வாய்ந்த பெற்ருேர்கள்! ஆயினும் குழந்தையோ ஊமை! இல்லை, அது பேசியது நம்மவர்க்கு புரிய வில்லையோ என்னவோ!

குழந்தையை சந்நிதிக்கு எடுத்துச் சென்றனர். சீரலைவாய் செந்தில்குமரன் சந்நிதிக்கு என்று சாற்றவும் வேண்டுமோ. "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே." ஆம் அன்பருள்ளத்தில வதியும் அகுகன் குருவாய் வந்தான். குழவிக்கு நயனதீட்சை அளித்தான். பேசச் சொன்ருன். குழந்தை

பேசவா செய்தது! இல்லை பாமாலை சூடியது! அதுவும் கலி வெண்பா! மாலையில் தொடுத்த பூக்கள் சிவஞான சித்தியார் என்னும் கனியில் பிழிந்து எடுத்த ரசம். இக்குழந்தை ஊமையாயிருந்தது என்று எழுதுவதைவிட அது பேசியது – பேசத் தெரிந்த குழந்தை - ஆனால் அது நம்மவர்க்குப் புரியவில்லை என்று எழுதுவதுதான் அறிவுக்குப் பொருத்தம் என்று தோன்றுகிறது.

தான் சூடிய கந்தர் கலிவெண்பாவில் காங்கேயனின் அழகு! அம்மம்மா! பேரழகு! கட்டழகு! கொள்ளையழகு! அங்கயற்கண்ணி அருமை புதல்வனின் அழகை–அபரிமிதமான அழகை-அங்கம் அங்கமாக அள்ளிப் பருகுகிறார். அவர் கண்டு உண்டு களிப்பெய்திய அக்கொள்ளை அழகை விண்டு நமக்கும் சிறிது தருகிறார்.

புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்மவிடாய் தீர்க்கும திருமொழியும்

அன்றலர்ந்த குமுதப்பூ அன்ன சிவந்த உதடுகள். அதில் புன் சிரிப்பு. அவன் பேசுகிறானும். அப்பேச்சு உயிர்களின் பழ வினையை களைகிறதாம். மூவிரண்டு முகங்கள். தன்னை அண்டின அன்பர்களின் பகையை ஒழிக்கிறதாம். பகைவர்களாகிய சூரபன்மனையும் அவன் சுற்றத்தாரையும் வேரோடு பிடுங்கி எறிந்து விட்டதாம். துன்பங்களை நீக்கினால் தானே வருவது இன்பம். அவ்வின்பத்தை–பேரின்பத்தை அளிக்கிறதாம். யாகங்களையும மறைகளையும் இடையூறின்றி முற்றுப்பெறச் செய்கின்றதாம். அண்டிய அடியவர்களுக்கு அவர்கள் வேண்டும் வரங்களை வேண்டியவாறே அளிக்கின்றதாம்.

''உருள் பூந்தண் தார்புரளும் மார்பினன்''

கண்டது நக்கீரர்.

''.......................................... கொந்தவிழ்ந்த
வேரிக்கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த''

குழந்தை கண்ட கொள்ளை அழகின் ஒருதுளி. கடம்ப மலர்மாலை. அவன் பெயரே கடம்பனுயிற்றே. கொத்துக் கொத்தாக இருந்தனவாம். அதுவும் தேன் சொட்டிக்கொண்டே

இருந்தனவாம். உருள் பூந்தண் தார்மார்பின் அழகை அள்ளிப் பருகிய அடிகள் ஆறு அத்துவாக்களின் வடிவாகவே காண்கிறார் அவ்வடிவேலவனை.

மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்த முறும் வன்னமே தொக்காகப்—பந்தனையால்
ஒத்த புவனத் துருவே உரோமமாத்
தத்துவங்களே சத்ததாதுவாய் — வைத்த
கலையே அவயமாக் காட்டும் அத்துவாவின்
நிலையே வடிவமா நின்றோய்

ஆறத்துவாக்களையே உருவாகக் கொண்ட இக்குகன், கருணையின் திருஉருவாம். பார்வையினாலேயே ஆன்மாக்களின் பழையவினையை அகற்றி விடுகிறான். பின் மெய்ஞானக்கண்ணையும் காட்டுகிறானும். எவ்வாறெனின் உயிர்களின் ஸ்தூல தேகக் கருவிகள் அறுபதும், சூட்சம தேகக் கருவிகள் எட்டும், ஆறு ஆதாரங்களையும், மேலுள்ள சூன்ய ஆகாசமும், மூவிரண்டு அத்துவாக்களும் ஆன்மாவின் பார்வையிலிருந்து நீக்கி ஆணவத்தை அகற்றி அதன்பின் மெய்ஞ்ஞானம் காட்டுகிறானும். என்னே இப்பெம்மானின் பேரருள்.

இப்பேரருளாளனை, கருணைக்கடல் கார்த்திகேயனை, கந்தன் காடுகிழாளின் மைந்தனை, செந்தில் நாயகனை, கச்சைத் திரு அரையனை, சீரடியனை, செங்கயனை நாமும் வழுத்தி, ஏத்தி எண்ணிலா பேரு பெற்று ஊரு இல்லாது இன்புற்றுய்வோமாக.

# "முருகன் பெருமை"

'முத்தமிழ்' ஆசிரியர்,

**திரு. பண்டித நடேசனார், அவர்கள், B. A., J. P.,**

*கௌரவ மாகாண நீதிபதி, சென்னை–7.*

உலகம் பலவிதம்; மண்ணுலகம் வானுலகத்தை விடச் சிறந்தது. திருவள்ளுவர் கருத்தும் அஃதே. நம்மை உய்யக் கொள்ளும் சிவநெறியுடையதே தலையாய உலகம். "புவனியிற் போய்ப் பிறவாமையில் நாள் நாம் போக்குகின்றோம் அவமே" என்பது மணிவாசகம். அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் எனும் நால்வகைத தோற்றத்திலும் எழுவகைப்பிறப் பிலும் எணபத்து நான்கு லட்ச யோனி பேதங்களிலும் சிறப் புடையது மனிதப்பிறவியே. "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" என்றார் தாயுமானார். மனிதன் எனும் பதத்திலுள்ள "மன்" எனும் பகுதிக்குப் பொருள் "நினைத்தல்." கடவுள் உண்மையை நினைப்பவனே மனிதனு வான். கண்ணுக்குப் புலப்படா ஒன்றை இல்லை எனல் அறி வின்மை. அது விலங்கின் புத்தியாம் எனலாம். உலகை அறிந்து அதன் இன்பம் நுகர்வது சிற்றின்பம் ஆகும். கடவுளை "வாலறிவன்" என்றார் வள்ளுவர். அறிவுக்கறிவாகியவனே "நமசிவயம்" அவ்வாலறிவனை அறியப் பேரறிவு வேண்டும்; ஞானக்கண் வேண்டும். 'ஊனக்கண் பாசம், உணராப்பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி' (= ஆய்ந்தறிக). அக்கடவு ளுக்குப் பல பெயர்களில் "ஆண்டவன்" என்பது ஒன்று. எல்லா மதத்தினரும் ஒத்துக்கொண்டு கூறும் பதம் இதுவே. செந்தி லாண்டவன் என்றும் 'பழனியாண்டவன் என்றும் முருகனுக்கே கூறுப. அம்முருகனில்லா இடமே உலகிலில்லை. அழகுள்ள இடமெல்லாம் அவனுளன். 'பலர் புகழ் ஞாயிறு' அன்னவன்

முருகன். முருகன் எனும் நாமம் மகா வாக்கியமாகும்; "பெரும் பெயர் முருகன்" என்றார் நக்கீரதேவர்.

பாலில் வெண்ணெய் இருத்தல் போல் முருகனும் உலகில் எங்கும் உளன். பாலைக் காய்ச்சிப்பிரை குத்தித் தயிராக்கிக் கடைந்தால் வெளிப்படும் வெண்ணெய். அது போலவே மனத்தில் தியானித்து, வாயால் திருப்புகழைப் பாடித் தேகத்தால் ஆலய வழிபாடு செய்து ஒருவர் வாழுங்கால், கடவுளுண்மை விளக்க முறும். பன்னெறியாலும் ஆய்ந்து அறிந்து உண்டென உணரும் ஆண்டவன், ஊர், பேர், குறி, குணமற்றவர் எனினும் அவர் நமக்குள்ளே உயிர்க் கடவுளாய் விளங்குகின்றார். "உயிர்க் கடவுளாய் என்னுள்ளே நின்றான" என்றார் கச்சியப்பர்.

நமக்குள் இருப்பவன் எனும் உண்மையை விளக்குவனவே "சிவ", "இறைவன்" என்பன. "வசி" என்பதே சிவ என்றா யிற்று. எழுத்தின் நிலைமாற்றம் சாண்க. சிறுத்தல் = தங்குதல் எவன் யாவரிடமும் தங்கியுள்ளவனோ அவனே "சிவனவன்" எனலாம். அவன் தங்கியில்லை எனில் மணமகன் பிண மகனாகின்றான். "அகர உயிர்போல் அறிவாகி எங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து" என்பது திருவருட்பயன். முகத்தால் வித்தியாசமே அன்றி அறுமுகச் சிவனும் ஐம்முகச் சிவனும் ஒன்றே. சூரனைக் கொல்ல நினைதது வீற்றிருந்த படைவீடும், சூரனைக் கொன்று வெற்றிவிழாக் கொண்டாடிய ஸ்தலமும், திருச்செந்தூர் ஆகும்; அவ்வெற்றியின் காரண மாகவே இவ்வூர் "ஜயந்தி" புரம் என்ப. இவணுள்ள இறை வனே முதற் கடவுளாவன்; தொல்லோனுமாவன். "நமது சக்தி அறுமுகன்; அவனும் யாமும் பேதகம் அன்றால்; சீரும் போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்கு அருளவல்லான்" என்று பரமேஸ்வரனே பரமேஸ்வரிக்குக் கூறியுள்ளான்.

குகன், விசாகன், சரவணபவன், குமாரன், செவ்வேள், ஞான சக்திதரன் எனும் காரணப் பெயர்களைக் கவனிப்போம். தகராகாசமாகிய குகையில் இருப்பவன் குகன்; விசாக நட்சத் திரத்தில் பிறந்தவன் விசாகன; ஆறு விண்மீன்களைக் கொண்டது விசாகம்; முன் மூன்றும் பின் மூன்றுமாக விளங்குவது விசாகம், முன் மூன்றின் நடுவண் உள்ளது ஒளி

மிக்கது. ஆறுமுக சுவாமியின் முகங்கள் முன் மூன்றும் பின் மூன்றுமாக இருத்தலுக்குக் காரணம் விசாகத்தின் வடிவே. ஒளிமிக்க முகத்திலுள்ள திருவாயால் தமிழினைத் தந்தான்; தகப்பன் சாமியானுன். பட்சியில் சஞ்சரிப்பவன் எனலும் விசா கனுக்குப் பொருள். மங்களம், பிரகாசம், கொடை, அமைது, வீரம் எனும் பண்புகளில் உதித்தவன் (பவன) என்பதே சரவண பவன்; மாரனையும் அழகில் இழிவுபடுத்துபவன் என்று பொருள் படுவதே குமாரன் என்பது. செம்மை நலம் தருபவன் செவ் வேள். (வேள் = யாவராலும் விரும்பப் படுபவன்; கருவேள் = மன்மதன்) ஞான சக்தியாகிய வேலாயுதத்தைக் கரத்திலுடை யவனே ஞான சக்திதரன். இல்லறத்தார்க்குரிய கடவுளாம் சோமஸ்கந்த மூர்த்தியில் சத்துக்கும் சித்துக்கும் இடையே உள்ள ஸ்கந்தரே ஆனந்தப் பொருளாவர். முருகு = தெய்வத் தன்மை அழகு, இளமை திருவிழா என்பன பொருளாகும். திருவிழாவுக்குரியன் முருகன எனச் சங்க இலக்கியம் கூறும். ("முருகயர்ந்து வந்த முதுவாய் வேல" — முருகாற்றுப்படை)

"கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய"

என்றும்,

"மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினுல் அளக்கொணுமல்
நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடும் நிமல மூர்த்தி"

என்றும், கந்தபுராணம் கூறுகிறது. இவை முருகனது பெருமையை விளக்குவனவாம். 'ஒரு முருகா' என்றவுடன் அவன் திருமுருகாற்றுப்படையுடன் வருவான். முருகம்மையாரின் வரலாறு ஓர்க. வடமொழி வேதமே "சுப்ரஹ்மண்யோம்" என முக்கால் கூறுகின்றது என்று காஞ்சிப்புராண ஆசிரியர் கூறுப.

"மூல காரணமாய் நின்ற மூர்த்தி இம்மூர்த்தியன்றோ"

என்று நற்புத்தியின் காரணமாகச் சூரபதுமன் செந்திலாண்டவனைப்பற்றிக் கூறினுன்.

**சமஸ்டித்தெய்வம்**

ஆறு சமயக் கடவுள் வேறு வேறு அன்றி யான் ஒருவனே
அங்கங்கு இருந்து

அன்பர்க்கு முத்திவரு வித்து என்று யாவர்க்கும் அறிவித்த
வதன மணியே"

என்றும்

"பேறு தரும் தெய்வம் யாவைக்கும் யான் பெருந்தெய்வம் என்றே
வீறுமுகங் கொண்டு போரூர்முருகன் விளக்கியதே"

என்றும் சண்முகப் பெருமானின் பெருமையைக் கூறினர் சிதம்பரசுவாமிகள். முருகனை வழிபட்டார், கணபதி, சிவன், சிவை, மால், சூரியன் ஆகிய பல மூர்த்திகளையும் வணங்கியதற்குச் சமமாகும்; அறுவகை இறைமைக் குணங்களுடையவன் முருகன். அகத்தியர்க்குத் தமிழறிவித்தவன் முருகனே. கண்ணுடியில் இராமலிங்க சுவாமிகள் கண்ட முருகனைச் சொல்லோவியமாகக் காண்க.

"சீர்கொண்ட தெய்வ வதனங்களாலும் திகழ் கடப்பம்
தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத்தாள்களும்ஓர்
கூர்கொண்ட வேலும் மயிலும் நற்கோழிக் கொடியும் அருள்
கார்கொண்ட வண்மைத் தணிகாசலமும் என் கண்ணுற்றதே"

முருகபூசையின் பயன்

முருகா எனஉனை ஓதும் தவத்தினர் முதுலகில்
அருகாத செல்வம் அடைவார்; வியாதி அடைந்து நையார்;
ஒருகாலமும் துன்பம் எய்தார்; பரகதி உற்றிடுவார்
பொருகாலன் நாடு புகார் சமராபுரிப் புண்ணியனே!

எனவே முருகா முருகா என ஓதுக! ஓதின், முடியாப் பிறவிக் கடலிற் புகீர்; முழுதுங் கெடுக்கும் மிடியால் விசனப்படீர். தலையாய காரணம்: வேண்டியவரங் கொடுப்பான் மெய்கண்ட தெய்வம் இத்தெய்வமல்லால் புவியில் வேறில்லை என்ற குமரகுருபரரது உபதேசத்தை உன்னுக!

# "ஆன்றோர்கள் காட்டிய அருள்நெறி"

திரு. ஏ. மாணிக்கம் அவர்கள்,
"முருக நிலையம்"
வி ரூ ர்.

"அருளே வடிவானவன் இறைவன்" என்பது ஆன்றோர்கள் கண்ட துணிபு. "அங்கிங் கெனுதபடி யெங்கும்ப்ர காசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது" எனத் தாயுமானவரும், "கற்பனை கடந்த சோதி, கருணையே யுருவமாகி" என சேக்கிழாரும், "அருளுடைச் சுடரே! அளிந்ததோர் கனியே என மாணிக்க வாசகரும், "அருட் பெருஞ் சோதி! தனிப்பெருங் கருணை!" என இராமலிங்க அடிகளாரும், "கந்தா! முருகா! கருணாகரனே!" என அருணகிரியாரும், "கருணைத் திருவுருவாய்க் காசினிக்கே தோன்றி" எனக் குமரகுருபரரும், "கருணை கூர் முகங்கள் ஆறும்" எனக் கச்சியப்ப சிவாசாரியாரும், மற்றும் பிறரும் அருள் நிறைந்த நெஞ்சமொடு அவனியோர் உய்ய அருளியுள்ளனர். இத்தகைய அருளே வடிவான இறைவனுடைய அருளை நாம் பெறவேண்டுமானுல் நாம் அருளுடையவர்களாக ஆதல் வேண்டும். நாம் அருட்கண் கொண்டு நோக்கினுல் அனைத்தும் ஆண்டவன் வடிவமாகத் தோன்றும்,

"அருளால் எவையும்பார் என்ருன் — அத்தை
அறியாதே சுட்டியென் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லால் — கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி தோழி!

என்கின்ருர் தாயுமானுர். மேலும் "கண்ணுக்கு அணிகலம் கண்ணேட்டம்" என்கின்ருர் திருவள்ளுவர். ஆசையுடையார் விலங்காகவும், அன்புடையார் மனிதராகவும், அருளுடையார் தேவராகவும், உலகோரால் கருதப்படுவர். நமக்குத் தொடர்புடையார் மாட்டு ஒரு சிறிதும் பயன் கருதாமல் புரியும் உதவி அன்பின்பாலதாகும். தெருவில் உணவும் உடையும் இன்றி வறுமையினுல் வாடி நிற்கும் ஒருவருக்கு, குறிப்பறிந்து உண்டியும் உடையும் தந்து கடமையுணர்ச்சியுடன் செய்கின்ற

உபகாரம் அருளின்பால்பட்டதாகும். "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்கிறது மணிமேகலை. இச்சீரிய அருள் நெஞ்சங் கொண்டு வாழ்ந்தாரை; அருளாளர், புத்தேளிர், அடியார், அடிகளார், தொண்டர், ஆழ்வார், சான்றோர், மேலோர், உயர்ந்தோர், நிறைமொழிமாந்தர், பண்புடையோர், கடனறிகாட்சியவர், அறவோர் என்ற வகையிலே நமது முன்னோர்கள் சிறப்பித்துக் கூறியுள்ளனர். மேலும் இவ்வரிய குணமென்னுங் குன்றேறி நின்றவர்களாலேதான் உலக இயலும் அழியாமல் நிலைபெறுகின்றது என்பதும் நமது முன்னோர்கள் கண்ட முடிபு. "உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே" எனத் தொல்காப்பியரும், "பண்புடையார் பட்டுண்டு உலகம்" எனச் செந்நாப் போதாரும், "தமக்கென முயலா நோன்றாள் பிறர்க்கென முயலுநர் உண்மையானே — — — உண்டாலம்ம இவ்வுலகம்" எனக் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதியும், ஆய்ந்து கூறியுள்ளனர். நமது முன்னோர்கள் இறைவனுடைய அருளைப் பெற அருள்நெறி யொன்றே ஆன்ற வழியெனக் கொண்டு மேதினியோர் போற்ற வாழ்ந்தனர். இத்தகைய கருணை நிரம்பிய தொண்டின் மூலம் கடவுளைக் கண்டு, அருள் பெற்று உய்ந்தனர். "நடமாடுங் கோயில் நம்பர்க்(கு) ஒன்(று) ஈயில், படமாடுங் கோயில் பகவற்(கு) அதாமே" என்கின்றார் திருமூலர். தவிரவும், "அநாதைப் பிள்ளைகளை வைத்து வளர்க்கும் பெருந்தொண்டிலே நான் கடவுளைக் காண்கின்றேன்" என மேல்நாட்டு அறிஞர் திருமதி மக்கன் அம்மையாரும், "அநாகரீக மக்களான நீக்ரோவர்களுக்கு எழுத்து அறிவித்தல், அவர்களை அறிவுடையவர் ஆக்குதல், நாகரீகமுடையவராக்குதல் போன்ற முயற்சிகளில் இறைவனைக் காண்கிறேன்" என டேவிட் லிவிங்ஸ்டன் என்பாரும் கூறியுள்ளனர். மேலும் நமது தாயுமானாரும் "தன்னை யறிந்(து) அருளே தாரகமா நிற்பதுவே, யுன்னை யறிதற் குபாயம் பராபரமே," என்றும், "அன்பர்பணி செய்ய எனை ஆளாக்கி விட்டு விட்டால், இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே" என்றும் பகர்ந்தருளினர். மற்றும், "அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே" என இராமலிங்கரும், "இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம்" என ஔவையாரும் கூறியுள்ளனர். இஃதறிந்தன்றோ நமது சங்க

காலச் சான்றோர்கள்,எல்லோரும் இன்புற்றிருக்க எண்ணி,"என் கடன் பணி செய்து கிடப்பதே" என வாழ்ந்தனர். "அல்லும் பகலும் அயராதுழைத்து, செல்வத்தைச் சேர்த்துத் தாமே அனுபவிக்கக் கருதினர் அல்லர். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி வாழ்ந்தனர். "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு" எனக் கொண்டு, "ஆர்க்கும் இடுமின்! அவரிவர் என்னன்மின்!" என்றபடி இட்டுண்டு வாழ்ந்தனர். இது நமது ஊர். இது வேற்றூர். இவர் நம்மவர். இவர் அயலார் என்ற வேறுபாடு இன்றி, "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என மலரும் மணமும் போல ஒன்றி, நலமுற வாழ்ந்தனர். "மருந்தே யாயினும் விருந்தோடு உண்," என்ற கொள்கை வழிச் சென்று "பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தாற் போல" பலர்க்கும் பயனுற வாழ்ந்து நின்றனர். "இந்திரர் அமிழ்தம் இயைவது ஆயினும், இனிது எனத்தமியர் உண்டலும் இவரே" என்கிறது புறநானூறு. மேலும்,

"காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே",
"வெய்யிற் கொதுங்க வுதவா உடம்பின் வெறுநிழற்போல்,
கையிற் பொருளும் உதவாது காணுங் கடைவழிக்கே"

போன்ற பொன்னுன வாக்குகளைக் கண்ணுகப் போற்றி, உண்மையினை உணர்ந்து தமது எலும்பையும் பிறர்க்கே உரிமையாக்கி வாழ்ந்தனர். தம்மிடத்து செல்வம் சுருங்கிய காலத்தும், உயிரை விற்ருயினும் உதவி செய்து வாழ்ந்தனர் என்பதை, "குலந்தரு நல்லோர் செல்வங் குன்றினுந் தம்பாலில்லென் (று), அலந்தவர்க் குயிரை மாறியாயினுங் கொடுப்ப ரன்றே" என்கிறது திருவிளையாடற் புராணம். "இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார் கடனறி காட்சியவர்" என்கிறது திருக்குறள். "பேரறிஞர் தாக்கும் பிறர் துயரந் தாங்கியே, வீரமொடு காக்க விரைகுவார்"என்கிறது நன்னெறி நமது முன்னோர்கள் இன்னு செய்தார்க்கும் இனியவே செய்து வாழ்ந்தார்கள். ஊழிபெயரினுந் தாம் பெயரார், "அன்பின் வழியது உயிர்நிலை" எனக் கொண்டு, "அருளென்னும் அன்பு ஈன்குழவி"யைப் பெற்று, பெரிதும் பல்லோர் போற்ற வாழ்ந்தனர். அன்பில்லாத உயிர் வாழ்க்கையானது பாலைவனத்தில் பட்டமரம் தளிர்த்தாற் போன்றதாகும் என்ற கருத்தை ஊன்றியுணர்ந்து "மருந்தாகித்தப்பா

மரத்தைப் போல்''பலர்க்கும் பயன்சுரக்க வாழ்ந்து உயர்ந்தனர். "முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி", "செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்து" மகிழ்ச்சியுற்றனர். "விருந்து புறத்ததாத் தானுண்டல், சாவா மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று" என்ற பொய்யாமொழியின் மெய்யாம் வழியில் உய்ந்தனர். "தன்னுயிர் நீப்பினும் தான்பிறிது, இன்னுயிர் நீக்கும் வினை செய்யற்க" என்ற வழி நின்றனர். "யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற பொது நோக்கோடு வாழ்ந்தனர். தம் வாழ்வினைப் பெரிதாகக் கருதாமல் பிறர் நன்மையையே நாடினர். "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" என்கிறது அகநானூறு. "தன்னுயிர்க் கிரங்கான் பிறஉயிர் ஓம்பும் மன்னுயிர் முதல்வன்'' என்கிறது மணிமேகலை. எனவே, ''நூல் முறை தெரிந்து சீலத்தொழுகு" என்றபடி நமது "ஆன்றோர்கள் காட்டிய அருள்நெறி''களைப் பின்பற்றி ஆண்டவனுர் திருவருளைப் பெற்று உய்வோமாக!

ஆன்றோர்கள் காட்டியயிவ் வருள்நெறியின் பின்சென்ருல்,
ஆண்டவனுர் திருவடியை அடைந்திடலாம்: என்றேநம்
சான்றோர்கள் சாற்றியது தப்பாமோ? தப்பாகா!
சகம்போற்ற வாழ்ந்திடலாம்! சஞ்சலமும் வாழ்க்கையிலே
தோன்ருது! என்றென்றும், தூயநெறி இஃதென்றே
தொன்மறைகள் நன்முறையில் இன்பமுறச் சாற்றுவதை
ஊன்ருது ஏன்மனமே! உருக்குலைந்து வாடுகிருய்?
உண்மையிது! நன்மையுற ஊன்றிடுவாய் இக்கணமே!

# Satyakama (Jabala)

Sri J. P. Vaswani.

[Sri J. P. Vaswani is the saintly successor to the illustrious and great Sri T. L. Vaswaniji, Founder of the Mira Institution, and has taken charge of the Institution in Poona as its present head. He is also hon. principal of St. Mira's College run by the same Institution, and is engaged in the noble service of cultural and spiritual resuscitation of man. — Ed.]

Satyakama was a devotee of truth. In his daily life and living he bore witness to the ideal of truth. As he grew in years, he also grew in the longing to know the deeper truth of life. He set out in quest of a teacher who might show him the way to truth. His quest led him to the Ashram of Rishi Gautama. And when the Rishi asked him his name and that of his father, this youth, who had never spoken an untruth, bravely answered: "Master! my name is Satyakama, but the name of my father I know not. For I am a child of concupiscence."* The Rishi marvelled at the honesty of Satyakama and said to him: "Am I not thy father, child? From this day be thou a son to me. Stay here in the Ashram and may God's grace shine in you!"

Satyakama lived in the Ashrama of Rishi Gautama and served him in faith and in love. And each day, he drank in the wisdom of the Rishi's words and the

* According to Acharya Sankara, the import of Satyakama's reply was a different one, to which the attention of the readers may be directed in the Chandogyopanishad. — Ed.

The above article is reproduced with the kind permission of the Editor of 'The Divine Life'

inspiration of his noble life.

Then, one day, calling Satyakama to himself, the Rishi said: "My child! the time is come for you to leave this hermitage and find your dwelling in the depths of the forest. Take with yourself this herd of four hundred cows and bulls. Tend them, take care of them, and come not back to me until they have increased to a thousand."

Satyakama went to the forest. He looked after the cows; he made friends with them. And he made friends with the whistling wind and the whispering trees, with singing birds and flowing streams, with leaves and flowers, with rivers and rocks, with sun and moon and stars. The roses of spring spoke to him and the radiations of star-lit nights poured their blessings upon him.

Satyakama lived alone with the Alone. And in the solitude of the forest, he learned to listen to the voice of silence; he grew in the beauty of man of meditations. And, again and again, he asked the question:

'Tell me, O tell me,
Who art Thou who sitteth still
In this city of nine gates?'

He spoke to the rising and setting sun. He gazed into the depths of star-lit skies. He questioned the leaping flames that rose upwards: "Whither do ye go? To what unseen realm?"

The moon waxed and waned and waxed again. The cycle of seasons moved on. The cows and bulls continued to increase in hundreds. Satyakama had become a child of silence. He grew in beauty; he grew in purity; he grew in humility; he grew in love of God

and love of God's creation. But his question remained unanswered; "Who art Thou who abideth in this city of nine gates?"

Satyakama at last came to understand that the answer to his question would not come through ratiocination. It would come only when he had learnt to be still in God. So he freed himself from all strain, from all mental exertion, from the very thought of thought. The seeker, that he was, surrendered himself to Him, Who is the Lord of Truth and Love. "Do what Thou wilt with me," he said, "Thy will be done!"

Satyakama plunged into the ocean of God's love. And, again and again, he uttered the simple prayer: "O Thou! O Thou!"

Then, suddenly one day he saw, as in a flash, the truth: that everything is filled with God, everything is God. Not a grain of sand, not an atom of matter is there which is not filled with the Presence of the Divine. Satyakama realised his unity with the cows that looked at him with mild eyes, and the flowers that smiled in beauty all around him. His consciousness has expanded and he felt that he was one with all that existed,—one with birds and animals, plants and trees, sand and stone, one with the river that flowed and the breeze that blew, one with every single radiation that issued forth from the sun, the moon and the stars.

Satyakama had received the answer to his question. He had alighted upon the greatest discovery ever made.

And then he counted up the herd and found that

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# இளையான்குடி, ஸ்ரீ மாற நாயனார் புராணம்

இஃது
இளையான்குடி வேதாந்தமடம்
இராமேஸ்வரம் சிவாஸ்ரமம்
இவற்றின் ஸ்தாபகரும் தலைவரும் ஆன ஸ்ரீ சிவானந்த ஞான தேசிக
சுவாமியவர்களால் பாடப் பெற்றது

இன்னவா றிளசை மாற னில்லாளுந் தானும் நேர்ந்து
நன்னய வீசன் தொண்டர் நாடிய வனைத்துஞ் செய்தார்
மன்னவர் வணங்குங் கீர்த்தி மாறன தியற்கை யன்பை
கன்னல்வே ளெரித்த தேவன் கருதினு ளத்திற் றானே. 26

அளகைக் கோனிகர தான வருஞ்செல்வ வமயத் துற்ற
வளமையி னன்றி மற்றை வறுமைநாள் வந்த போதும்
உளமிவ னடியர் மாட்டு வுதவலும் வல்ல னேவென்
றுளமதில் வறுமை சேர வுன்னினு ருளமு வந்தே. 27

பல்வளச் செல்வ மெல்லாம் பகல்மதி யனைய தாக
அல்கல னடியார் பக்தி யரன்வழித் தொண்டு பூஜை
பல்பகல் வறுமை யுற்றும் பரமன தடியார்க் காணின்
பல்கடன் பட்டும் போற்றும் பக்தியில் மாறுன் மாறன். 28

என்றுமே சிவவே டத்தார்க் கென்னுடைச் செல்வ மென்றே
யொன்றிய வனைத்துந் தொண்டர்க் குண்மையாய்த் தானம் செய்தார்

(முன் பக்கத்தொடர்ச்சி)

there were exactly a thousand cows and bulls. Delighted, he returned to the Ashrama of his Guru. The preceptor looked at him: at Satyakama's gleaming eyes and his radiant face, lit up with the light of humility and love, and said: "Blessed are you, Satyakama! Unto you hath been revealed the secret of the Sages, the secret of the Ages. And there is nothing more you need to know."

துன்றிய வறுமை யுற்றுந் துறவரை யறச்சோ றேற்றும்
என்றுமே போற்ற வல்லா ரிவர்பக்தி யியம்ப லாமோ. 29

தனக்குள விலமோ சிற்றில் தரித்திர மதிக மாகும்
கனக்குறு பசியை மாற்றக் கருத்தொரு வகையு மில்லை
மனைக்குநற் கூறை யில்லை மறுதுணி யுடுக்க வில்லை
மனக்கணி லடியார் பக்தி மட்டுமே குறைவின் றுமால். 30

பக்தியை யடியார் போற்றும் பரதேவ னுத்தி னோர்ந்து
இத்தின மிளசை சென்று வியன்மாற னடையு மாறு
சத்திய முத்தி யீந்து சாருவ னென்று போந்தான்
மெய்த்தவ வேடத் தோடு மேவிய வவன்ற னில்லம். 31

அடைமழை யடைத்துப் பெய்ய வர்த்தராத் திரியில் வந்து
கடுகிய பசியால் மெத்தக் களைத்தனன் களைகண் காணேன்
உடனிதை மாற்றி லீரே லுயிர்போகும் பழியு மக்கே
கடனென வுரைத்தா னந்தக் கருணைவா ரிதியே யன்னான். 32

ஆரவே ணியர்தம் அன்ப வடிசில்நா மமைத்த ளிப்போ
மீரமே னியில கற்றி யிவ்விடத் திருத்தி யென்று
தாரமா திடத்து நண்ணித் தாபதர் நிலைமை கூறிக்
காரமர் குழலாய் செய்யுங் காரணங் கூறு கென்றார். 33

நாமினிச் செய்வ தென்னே நமர்பிறர் துணையு மில்லை
சாமமு மிரண்டா யிற்று சங்கட மெதுவு மின்றி
நாமுனம் விதைத்த நெல்லை நல்கினு லடிசில் செய்வே
னேமுற விதனை யன்றி யென்செய்வே னேழை யென்றாள். 34

நன்மொழி புகன்று யென்று நாயனார் வயலிற் சென்று
நென்முளை வாரி வந்தார் நேரிழை யெதிர்சென் றேற்றுச்
செந்நெலிற் சேறு நீக்கித் தீமூட்ட விறகில் லென்னத்
தன்மனை யலக்கை யீர்த்துத் தந்தன ரதனைக் கொண்டும். 35

வறுத்துநல் லரிசி யாக்கி வாய்த்தநல் லுலையிற் பெய்து
சுறுக்கினிற் சமையற் செய்தும் தொடுகறிக் கடியார் தந்த
வெறுப்பிலாப் பயிர்கள் தன்னை விதவிதங் கறிகள் செய்தும்
மறுத்திடாக் கற்பி னல்லாள் மகிழ்நருக் கறிவிப் பாளே. 36

தலைவர்முன் தலைவி யெய்திச் சமைத்தநல் வகைகள் காட்டி
நிலைபெறு தவரை யுண்ண நேர்மையா யழைமி னென்றாள்

நலமெனச் சென்று தூங்கு நற்றவர் துயிலை நீக்கச்
சொலவொணுச் சோதி ருப மாகவே தோன்றி ஞரே. 37

தீதிலாச் சோதீ கண்டு திகைத்திரு வருமே நின்ருர்
ஆதியா னிடப மீதில் அம்பிகை யுடனே தோன்றக்
கோதிலாக் காட்சி கண்டு குறைவற நிறைந்த பக்தர்
சோதியே தூய ஞானச் சுடர்மணி விளக்கே போற்றி. 38

கருணையங் கடலே மேலாங் கதிதரு நிதியே போற்றி
வருணனை தனக்கெட் டாத வருணனே போற்றி ஞானம்
அருணனி யெமக்கு நல்க அடியரே மில்லம் வந்து
தருணமீ தெமக்குக் காட்சி தந்தசங் கரனே போற்றி. 39

எண்ணரும் மறைகள் போற்றும் ஏகனே போற்றி ஞானப்
பெண்ணெரு பாகம் கொண்ட பெருமனே போற்றி மால்முன்
விண்ணவர் தமக்குங் காண விகிர்தனே யுன்னை யாங்கள்
கண்ணிஞற் காணப் பெற்ருேம் கதியிதன் மேலுப் உண்டோ. 40

என்னவே துதித்து நின்ற இயல்பரை இறைவ னேக்கி
என்னருந் தொண்டர் வேண்டு மியல்பெலா மிசையச் செய்தீர்
உன்னரு மனதிற் கேற்ற வுறுவரங் கேண்மி னென்னத்
தன்னக மகிழ்ந்து நோக்கித் தம்பதி பகர்வ தானுர். 41

அல்லிருங் களத்தோ யெங்க ளருவினைக் கீட தாக
எல்லையி லாத சென்ம மெத்தனை எடுத்திட் டாலும்
செல்வமும் வறுமை தானுஞ் சிந்தையைக் கலக்கி டாமல்
நல்லநின் னன்பர்ப் போற்றும் நன்மையே யெமக்கு வேண்டும். 42

அடியவர் தம்மைப் போற்ற அரும்பெருந் தனமு மன்னுர்
அடிதனக் கேவல் செய்யும் ஆக்கையு மவர்க ளுள்ளப்
படியறிந் தொழுகு நல்ல பண்பம ராவி மூன்றும்
அடியரேந் தமக்கு நல்கி ஆண்டருள் புரிவா யெந்தாய். 43

என்றவர் கேட்ட வெல்லா மியல்பெற அளித்து மேலாம்
மன்றலங் கொன்றை வேய்ந்த மகிபனும் மகிழ்வி னேடும்
இன்றிந்த வுடம்பி னேடு மியலுபல் வளமும் பெற்றுத்
துன்றுநும் மனதிற் கேற்ற தொண்டெலா மாற்றிப் பின்னர். 44

இப்பெரு முடலை நீத்து என்றனிக் கணங்கள் சூழ
வொப்பிலாச் சிவிகை யூர்ந்து வுத்தம பதங்கள் கண்டு

செப்பரும் முனிவர் தேவர் சித்தர் விஞ்சையர் கருடர்
எப்பெருந் தவருங் காணு என்பெரு முலகம் வாரீர். 45

அன்பரா யுள்ளீர் கேளீர் அருமறை முடிவ தான
என்பெரு முலக மெய்தி யிருநிதிக் கிழவன் றனே
தன்பெரு நிதிய மேந்தித் தனிப்பெரு மேவல் செய்ய
வின்பமார்ந் திருப்பீ ரென்றே யிசைத்தொளி யாகிச் சென்றான். 46

சென்றுள விறைவன் சொன்ன செயலினை யுளத்தி லோர்
தன்றனி நகரில் மேலாந் தனமுனை நாட்போற் பெற்று
என்றுமே தொண்டர் பூசை யினிதுறப் போற்றி வாழ்ந்தே
அன்றரன் சொன்ன வாபோ லடைந்தனர் கைலை லோகம். 47

பரம்பர னுலக மெய்திப் பல்பெரும் போகந் துய்த்துத்
திரம்பெறு ஞானம் பெற்றுச் சீவன்முத் தருமே யாகிச்
சரம்பெற அவனு னில்லாச் சாஸ்வத முத்தி பெற்றார்
நரசுர வுலக முற்றோர் நாடிடும் பதமீ தாமே. 48

இப்பெருங் கதையைக் கையா லெழுதினோர் படித்து ளோரும்
மெய்ப்படச் செவியிற் கேட்க மேவிய தொண்டர் யாரும்
செப்பிய விளைசை மாறன் செயலினி லினிது சேர்ந்தே
அப்பணி சடிலத் தெம்மான் அடியிணை சேரு வாரே. 49

அக்ஷய வருடந் தன்னில் ஆவணி மகமா நாளில்
தெக்ஷிண பாண்டி நாட்டிற் சிவகெங்கைச் சமினைச் சேர்ந்த
பக்ஷமா மிளைசை வந்து பாடினன் மாறன் காதை
தக்ஷிண யிளைசை மேய தனிச்சிவா னந்தன் றானே. 50

வாழிநல் லிளைசை மாறன் மனமகி ழீச னன்பர்
வாழிநல் லிளைசை மாறன் வழிவழி மரபு வந்தோர்
வாழிநல் லிளைசை மாறன் மலரடிக் கன்பு செய்வோர்
வாழிநல் லிளைசை மேவும் மன்பதை யனைத்துந் தானே. 51

திருச்சிற்றம்பலம்

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 18, இதழ் 5-ன் தொடர்ச்சி]

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MÀNIKYA VACHAKA)

81. கொள்ளேன புரந்தரன் மாலயன் வாழ்வு குடி
 கெடினு
நள்ளே னினதடி யாரொடல் லானர கம்புகினு
மெள்ளேன் றிருவரு ளாலே யிருக்கப் பெறி
 னிறைவா
வுள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க ளுத்
 தமனே.

81. Indra or Vishnu or Brahm,
 Their divine bliss crave not I;
I seek the love of Thy saints,
 Though my house perish thereby.
To the worst hell I will go,
 So but Thy grace be with me.
Best of all, how could my heart
 Think of a god beside Thee?

(To be continued)

---

Reproduced with the kind permission of Oxford University Press, Calcutta.

(N B. Copies available for sale at the above Press.)

# கோலும் குடியும்.

திருமதி. அனந்தலக்ஷ்மி சுப்ரமணியம் அவர்கள், M.A., B.T.,
5, விநாயகமுதலி தெரு, சென்னை-1.

நீண்டதோர் சாலை. சாலையில் என்னுடன் சேர்ந்து நடை போடுகிறீர்கள். சாலை வழி நடக்கும் நாம், சாலையின் ஓரத்தில் தனித்து நிற்கும் ஒரு பனை மரத்தை—வானுயர்ந்து நிற்கும் மரத்தைக் கழுத்தொடிய நிமிர்ந்து பார்க்கிறோம். ஆனால் நிழல் தேடிச் செல்லும் நாமோ தனி மரத்தைத் தாண்டிச் செல்லவே விழைகிறோம். சாலையின் முடிவாய் சோலை அமையும் போது நாம் மகிழ்ச்சியில் நம்மை மறக்கிறோம். சோலையில் ஒரு புதரில் மணம் பரப்பி நிற்கும் ஒரு தாழையைவிட, தடாகத்தைச் செவ் வண்ணமாய் மாற்றும் செந்தாமரை கூட்டங்கள் கிறங்க வைக்கின்றன. அதே போலத்தான் மனித வாழ்க்கையும். தனிமரம் தோப்பாவதில்லை. தனிமனிதன் ஒரு சமுதாயம் ஆவதில்லை. இப்படி எண்ணிக் கொண்டு இருக்கும் போது என்றோ வாழ்ந்த ஆங்கிலக் கவி நியுமனின் சொற்கள் எதிரொலிக்கின்றன. "No man is an island! No man stands alone!!". தனியாகத்தான் பிறக்கின்றான். இறக்கும்போதும் தனியாகத்தான சாகின்றான். ஆனால் வியப்பிலும் வியப்பாக, வாழும்போதுதான் தனியாக வாழத்தெரியவில்லை. வாழ முடியவில்லை.

தனிமைக்கஞ்சிய மனிதக்கூட்டம் தனக்கோர் சமுதாயத்தை அமைத்துக் கொண்டது. வலிமை உடையோர் ஆள்பவராக மாறினர். வாழத் தெரிந்தவர் கோல்பணியும் குடியாக மாறினர். ஆள்பவன் திறனால், அவனுக்கடங்கி வாழ்பவன் ஒத்துழைப்பால், நாடும் நகரும் வளம்பெற்றன. இனியும் வளம்பெறும். நல்ல அரசின் தனிச்சிறப்பை நாம் வள்ளுவர் கூற வியக்கின்றோம். கம்பன் பாட மயங்குகின்றோம்.

நாட்டை நலம் குறையாமல் காப்பது கோலோச்சும் குடி மகனின் பொறுப்பு. 'அரசன் எவ்வழி, மக்கள் அவ்வழி' என்பதற்கேற்ப செங்கோன்மை தவருது இருப்பது மூலம் நாட்டில் செம்மை நிலவும். இதனுல்தான் பொய்யா மொழியாரும்,

“முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்”

என்று கூறிவிட்டார். எப்பொழுதும் ஆள்பவன் குடிகளோடு குடிகளாக நெருங்கிப் பழகி அவர்கட்கு உற்றுழி உதவும் உயர் நண்பனுக மாறவேண்டும். மன்னன் அல்லது ஆள்பவர் அங்கு அன்று இருப்பது ஆட்சியின் பெருமைக்காக அல்ல. தன்னை ஒத்தாரை வாழவைக்கத் தனக்குக் கிடைத்த ஒரு வாய்ப்பு என்பது உணரவேண்டும். காட்சிக்கெளியராய் இன்சொல் என்னும் நன்சொல் பேசி, அவர்கள் உள்ளத்தை உழுது பண் படுத்தி அன்பு, நம்பிக்கை முதலிய வித்துக்களைத்தூவவேண்டும். இதனைத்தான் உயர் வள்ளுவனும் மொழிந்தார்.

இன்றுபோல் அன்று குடியாட்சிஇல்லை. முடியாட்சி தான் இருந்தது. இன்றைய குடியாட்சியை விட, பைந்தமிழ் நாட்டு முடியாட்சியைச் சிறந்த தெனக் கூறலாம். குடியாட்சியில் 'உரிமை உரிமை” என்ற பெயரில், “State! I am the state” என்று கூறி மகிழ்ந்த பிரெஞ்சு மன்னனுக மாறி விடுகிருர்கள். தலைவனை மீறும் குடிமக்களும், கண்ட போதெல்லாம், அரசினர் என்ருல் குற்றங்கள் குறைகள் மலிந்தவர் என்று எண்ணும் இனத்தோடு, குற்றங்குறைகளையேத் தேடிச் செல்லும் மக்களும் அன்று இல்லை. குடிகளுக்காகத்தான் வாழ வேண்டும் என்பதை மறந்தோ, குடிகளும் தன்னைப்போல் உணர்ச்சியுடையார் என் பதை மறந்தோ வாழ்ந்த மன்னனைக் காண இயலாது. “அன்று, அரசின்றேல் குடியில்லை; குடியின்றேல் அரசில்லை” என்ற நெருங்கிய உறவு அமைந்திருந்தது.

பழம் நூல்களைத் திருப்பிப் பாருங்கள். நக்கீரர் தந்த திருமுருகாற்றுப்படையும், வைணவர்கோன் திருமங்கை யாழ் வாரின் வாய்ச்சொற்களையும் எண்ணிப்பாருங்கள். கம்பன் “மக் கட்கு உடம்புமாயினுன்” மன்னன் என்று ஏன் சொன்னுன் என்று சிந்தியுங்கள். அப்பொழுது, குடிக்கும் கோனுக்கும்

உள்ள தொடர்பு புரியும். இறைவனையே அரசனுகக் கொண்டு தான் பொருள் நாடி நிற்கும் இரவலனுக அவன் அன்பிற் கேங்கும் குடிமகனுக மாறி விடுகிருர் நக்கீரர். முருகனை, தன்னைக் காக்கும் இறைவனுக, தான் தன்னைக் காக்கவேண்டி நிற்கும் குடிமகனுக மாறிவிடுகிருர்.

"உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின் செல்லேன் – பன்னிருகை
கோலப்பா வானேர் கொடிய வினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே"

என்று வேண்டுகிருர்.

எப்பொழுதும் நாடு நாடாக நலம் பெற்றிருக்குமானுல் அந்தப் பெரும் பெருமையில் பெரும் பகுதி ஆள்வோனையேச் சாரும். பெற்றதாயை விட பிறந்த பொன்னுடு நனி சிறந்து விளங்க வேண்டுமானுல் அந்தப் பொறுப்பு ஆண்டவனின் கையில் தான் உள்ளது.

"நாடா கொன்ரு காடா கொன்ரு
அவலா கொன்ரு மிசையா கொன்ரு
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி வாழிய நலனே"

என வரையறுத்திச் சென்ருர் பெண்பாற் புலவர். பிசிராந்தையார், ஆண்டு பலவாக நரையிலா திருப்பதற்குக் காரணம் வேந்தன் அல்லவை செய்யானுக இருக்க, அவனுக்கு உதவும் ஆன்றவிந்தடங்கிய சான்ருேர் வாழ்ந்தமை தான் என்கிருர். நல்ல, ஆடவர் நாட்டை நடத்த நல்ல மண்ணுக மாற்ற வேண்டிய பொறுப்பு அவருடையது என்பதை இன்றைய சமுதாயத் தலைவர்கள் உணர வேண்டும்.

நாடு வளம் குன்ருது வாழவைப்பது அரசன் கையில்தான் உள்ளது. இன்று உரிமை கிட்டியபின்பு, எத்தனையோ அணைகள் கட்டப்பட்டு உள்ளதைக் காண்கிருேம். வரண்ட பாலையையும் ஜீவநதியோடும் சமவெளியாக மாற்றுவதைக் காணகிருேம். இத்தகைய சிறப்பு பழந்தமிழனின் தனிசிறப்பு. காடுகொன்று நாடாக்கி குளம் தொட்டு வளம் பெருக்கினுன் கரிகாலன்,

காவிரியன்னையை எழிலொழுகும் மங்கையாக மாற்றியவன் சோழன் எனச் சிலம்பு ஆர்ப்பரிக்கிறது. சோலைக் குயில்கள் இசைபாட, மயில்கள் ஆட, காமர் மாலை அருகசைய காவிரி நடந்ததெல்லாம், சோழனின் திறனால்தான் என்கிறார் சோழ மன்னன். நாட்டின் வளம் பெருகவும் குன்றவும் பெருமையையும் பழியையும் ஏற்பர் ஆள்பவர்தான் என்பதை இன்றைய உலகாள்வோர் உணரவேண்டும்.

"வான்பொய்ப்பினும் மாரிகுன்றினும்
இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர் பழிக்கும் இக்கண்ணகன் ஞாலம்"

என்று புறம் கூறுவதைத் தன் மறையாகக் கொள்ளவேண்டும்.

ஒருநாடு வளம்பெற மிகமிகத் தேவையானது அன்பும் பண்பும்தான். இன்று விளைபொருள்களில் எத்தனை முட்டுக்கட்டைகள் தோன்றுகின்றன. உண்ண உணவுக்காக, இந்த விஞ்ஞான உலகில் திண்டாடுகிறோம். அதற்குக்காரணம் மாரி வளம் பொய்த்ததா? உற்பத்தி முறை சரியில்லையா! என்றும் உழைக்கும் மனிதன் திடீரெனச் சோம்பித் திரியத் தொடங்கிவிட்டானா? இல்லை. ஆனால் மக்கள் பண்பு குறைந்தனர். "தனி மனிதனுக்கு உணவில்லை எனில் சகத்தினை அழித்துவிடுவோம்" என்று முழக்கமிட்ட பாரதி தோன்றிய நாட்டில், "எனக்கு மட்டும் உணவினை ஆக்கிப் படைத்திடுவேன்" என்ற தன்னலமே நன்னலமாய்க் கொண்ட புல்லுருவிகள் தோன்றியதுதான் காரணம். மண்ணெண்ணெய்பஞ்சமும், அரிசியின் கட்டுத்திட்டமும், வளம் மிக்க நாட்டில் மக்கள் மன வளம் இல்லாது இருப்பதைத்தான் காட்டுகிறது. அதேசமயம், மக்களும், மன்னனும் பண்புடையராய் இருப்பின், நாட்டின் மாரி பொய்ப்பினும், வற்கடம் தோன்றினும் தன் முயற்சியால் வளம் பெருக்கலாம். நாம், பண்டைத்தமிழ் நாட்டில் பஞ்சம் என்பதே தோன்றவில்லை எனக் கூற முடியாது. பல்லாயிரம் ஆண்டுகளில், ஒரு நாளாவது, மாரி பொய்த்திருக்காது என்பதோ, ஆறு வற்றாது என்பதோ நம்பமுடியாது. ஆனால், அன்று ஆள்பவன் உதவி திறனால் மக்கள் உழைப்பால், தோன்றிய பஞ்சத்தையும் சமாளித்தனர். இந்த உண்மையைப் பெரும்படிப்பினையாக, இன்றைய சமுதாயம் கொள்ளவேண்டும்.

நாகரிகமாக வாழத் தொடங்கிய மனிதன் தன் பண்பாலும் உள்ளத் துடிப்பாலும் பரந்த உலகைப் பண்பால் பிணிக்கப்பாடுபட்டான். அந்த முயற்சியே, பிற்காலத்தில், பெருநாடுகள் தோன்ற, கூட்டுறவுடன் வாழத் தொடங்கின. நாகரிகத்தால், பண்பால் கூட்டாகத் தொண்டாற்றலே நாகரிக நாடுகள் இன்று நாகரிகத்தின் எல்லையில் துண்டாடப்பட்டன. இன்று நாடுகள்ஒன்றுக்குள்ளேயே நீண்டசுவர். தந்தைசுவரின் ஒரு பக்கத்தில் வாழ, பெற்ற குழந்தைகள் சுவரின் மறுபுறத்தில் முடங்குவதே இன்றைய ஆட்சியின் பெருமை. இவ்வாறு துண்டாடுவதைத் தன் பெருமையாகக் கொள்கின்றன. மற்ற அரசர்கள், இப்படி ஒரே மொழி, ஒரு பண்பாடு கொண்ட ஒரே நாட்டைப் பிளவு படுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்ட உலகில், ஒற்றுமைக்கே வழிகாட்டியாக விளங்கும் நம் தமிழ் நாடு இந்த தொற்று நோய்க்கு ஆளாகாமல் இருக்க வேண்டும். அது ஆள்பவன், குடிமக்கள் பொறுப்பு.

இதுவரை கோலின் பெருமையையும் குடியின் பொறுப்பும் கண்டோம். பண்டைத் தமிழ் நூல்கள் சட்டத்திட்டங்களாக. கோனின் பொறுப்பையும், குடியின் வாழ்வும் பற்றி விளக்கும் அவற்றை ஆழ்ந்து படிப்பவர்கள் வாழ்விலும் பயன்படுத்த வேண்டும். வாழ்க்கை வேறு, கொள்கை வேறல்ல. மலரும் மணமும் போல், இதழும் நிறமும் போல், நீரும் அலையும் போல், வாழ்க்கையில் உயிர் குறிக் கோள் ஒன்றி நிற்க வேண்டும். மன்னனும், மக்களும் ஒன்றி வாழ வேண்டும். அப்பொழுது தான் நாடு நாடாக வளரமுடியும். உலகம் உலகமாக விளங்கும். கம்பனும் வள்ளுவனும் கண்ட கனவு ஓரளவு நினைவாக மாற முடியும்.

# தோட்டத்து மாம்பழம்

சி. அ.

'**ப**ழம்' என்ருல் நாவில் நீர் ஊறுவதும், 'காய்' என்ருல், முகம் வாடிவிடுவதும் இயற்கை. ஒரு காரியத்தைப் பற்றிச் சென்றவர் திரும்பி வருவாரேயாஞல், அவர் சென்றதைப்பற்றி அறிய விரும்புபவர்கள், அவரை, 'காயோ? பழமோ?' என்று கேட்பது நம்மிடையே உள்ள ஒரு வழக்கம். அவரும் அக் காரியம் நல்ல வகையில் முற்றுப்பெற்றிருந்தால், 'பழந்தான்' என்று உடனே தயங்காது மறுமொழி சொல்வார். அக்காரியம் முற்றுப்பெருவிட்டால், தெளிவாக ஒன்றையும் சொல்லாமல் முணுமுணுப்பார். இவற்றிலிருந்து, பழத்தின்மேல் நம் மக்களுக்கு எவ்வளவு விருப்பம் உள்ளது என்பது தெரியவரும்.

"கனி தந்தால் கனி உண்ணவும் வல்லிரே" என்று கேட்கின்ருர் அப்பர். 'கனிகளில் சிறந்தவை முக்கனிகள்' என்று சொல்வார்கள், 'வாழை, மா, பலா' என்பவை முக்கனிகள். இவைகளில் பலாப்பழத்தை ஒருவர் முழுவதும் உண்ணுதல் இயலாது, அப்பர் தரும் பழம் அத்தகைய பழம் போலும்! அதஞல் தான் அவர் அவ்வாறு கேட்கின்ருர், வாழைப்பழம் எளிதில் உண்ணத்தக்க ஒன்று; எப்பொழுதும் கிடைப்பது; அதன் சுவையும் பொதுவானதே. இந்த இரண்டிற்கும் நடுநிலேயாய் நிற்பது மாம்பழம். அதஞல், இதனே மக்கள் பெரிதும் விரும்புவர்.

தோட்டங்களில் மிகவும் கருத்தாகப் பாதுகாக்கப்படுவது மாம்பழமே. நல்ல சுவையுடையதாய் அழகாகப் பழுத்திருக்கும் மாம்பழம், பார்க்கும் பொழுதே கண்ணேப் பறிக்கும்; கருத்தைக் கவரும். ஆஞல், அது நல்லவேலி அமைந்த தோட்டத்திற்குள், மிக்க பாதுகாப்பில் இருப்பதால், அதனே உடைய

---

*இக்கட்டுரை 'ஞானசம்பந்தம்' ஆசிரியர் அனுமதி பெற்று பிரசுரிக்கப்படுகிறது.*

உரிமையாளர் இசைவில்லாமல் அதைப் பிறர் ஒருவரும் அடைய இயலாது. ஆகவே, மாம்பழத்தைப்பெற உரிமையாளர் இசைவைப்பெற வேண்டும். அஃது எப்படி?

முதலில் தோட்டத்தைக் காவல்புரியும் காவற்காரரை அணுக வேண்டும்; அணுகி அவருக்குப் பணிவான வார்த்தைகள் பல சொல்லி, அவரது தயவைப்பெற வேண்டும். பின்பு அவர் தம்மிடம் வந்தவரைத் தலைவரிடம் அழைத்துச் சென்று அறிமுகப் படுத்தித் தோட்டத்தில் உள்ள பழத்தைப் பறித்துக் கொடுப்பார். தலைவர் ஒரு வள்ளலாக இருந்தால், தோட்டத்தில் பழம் உள்ள நாள்வரையில் வேண்டியபொழுது பழத்தைப் பெற்று உண்ணலாம். ஆனால், எப்பொழுதும் தோட்டத்தின் காவலரையோ அல்லது வேறு வாயிலாளர்களையோ அணுகித்தான் ஆகவேண்டும். அவர்கள் கைவிட்டுவிடுவார்களாயின், பின்பு பழத்தை நினைத்து ஏங்க வேண்டுவதுதான்.

தோட்டத்தில் உள்ள பழங்களைச் சிலவேளைகளில் காட்டில் உள்ள நரிகள் புகுந்து தின்பது உண்டு. 'திராட்சைக் கொடியில் உயரத்தில் இருந்த பழக்குலை ஒன்றை நரி ஒன்று கௌவிச் செல்வதற்கு எட்டி எட்டிக் குதித்தும் முடியாமல் திரும்பிப் போய் விட்டது' என்று ஒரு கதை உண்டு. காவற்காரர்கள் சோம்பல் உடையவர்களாய் இருக்கின்ற தோட்டத்தில் தான் நரிகள் நுழைய முடியும். அவர்கள் விழிப்புள்ளவர்களாய் இருந்தால், நரிகளோ அல்லது நரிபோன்றவர்களோ உள்ளே நுழைய முடியாது. வெளியிலே இருந்து பழத்தைப் பார்த்து ஏங்குவதோடு அவர்கள் செயல் முடிந்துவிடும். காவற்காரர் தயவை முன்பு பெற்றுப் பின்பு இழந்தவர்கள் நிலையும் இதுதான். இவ்வுலக நிகழ்ச்சியை வைத்துத் திருமூலர் ஒரு பாடலை அருளுகின்றான்.

"தோட்டத்தில் மாம்பழம் தோண்டி விழுந்தக்கால்,
நாட்டின் புறத்தில் நரிஅழைத் தென்செய்யும்!
முட்டிக் கொடுத்து முதல்வனை முன்னிட்டுக்
காட்டிக் கொடுத்தவா கைவிட்ட வாறே."

ஒரு பெரிய தோட்டத்தில் நல்ல மாம்பழம் ஒன்று தோண்டி அளவு பெரியதாய்ப் பழுத்துள்ளது. அது கிளையில் உயரத்தி

லும் இல்லாமல் கீழே விழுந்து கிடக்கின்றது. இது வெளியே மறைந்து வசிக்கின்ற நரிகட்குத் தெரிய வந்தது. இரவு வந்தது; ஊரும் அடங்கி விட்டது; ஆனால் காவற்காரர் விழிப்பாய் இருக்கின்றார். அவைகள் என்ன செய்யும்? எல்லா நரிகளும் ஒன்று சேர்ந்து கூப்பாடு போட்டன; அதற்கு மேல் அவைகள் என்ன செய்ய முடியும்?

பெரிய தோட்டம், 'சிதாகாசம்' எனப்படுகின்ற ஞான வெளி. அதில் உள்ள பெரிய மாம்பழம், சிவானந்தம். இதனை உடைய தலைவர் சிவபெருமான். இப்பழம் எதிலும் ஒட்டிக் கொண்டிருக்கவில்லை. எங்கும் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க் கிடக்கின்றது; சிவபெருமானாகிய தலைவரும், பெரிய அருள் வள்ளல். இந்த மாம்பழம் எக்காலத்திலும் உள்ளது. பாசம் என்கின்ற வேலி அதை அணுகவொட்டாமல் தடுத்துக் குறுக்கே நிற்கின்றது. அதைக் கடந்து செல்வதற்கு, 'ஞானம்' என்கின்ற ஒரு வழியே உள்ளது. அந்த வழியில் அழைத்துச்சென்று முதல்வராகிய சிவபெருமானிடத்தில் காட்டி 'அவருக்கு உரியவராகக் கொடுக்கும் வாயிலாளர் ஞானகுருவே. அவரது அருள் இல்லாமல் அந்த வழியில் சென்று அப்பெருமானைக் காணுதல் இயலாது. ஞானகுருவையே அறியாதவர்கள், ஞான நூல்களை மட்டும் படித்துச் சிவானந்தத்தைப்பற்றிப் பெரும் பேச்சுக்கள் பேசிக்கொண்டிருப்பார்கள். ஆனால், அவர்கள் பேச்செல்லாம், தோட்டத்தின் உள்ளே செல்ல மாட்டாத நாட்டுப்புறத்து நரிகளின் கூப்பாடுபோலத்தான் அமையும். ஞானகுருவை அடைந்தவர்கள் ஞானத்தின் வழியே சிவத்தைக் கண்டு சிவானந்தத்தைப் பெற்று மகிழ்வார்கள். அதைப் பெற்ற பின்பும் குருலிங்க சங்கமங்களைச் சிவனெனவே கண்டு வழிபடுகின்றவர்களே, அச்சிவானந்தத்தை நிலையாகப் பெற்று அனுபவிக்க முடியும். இல்லையேல் குருலிங்க சங்கமங்களால் கைவிடப்பட்டுச் சிவானந்தத்தையும் இழக்க நேரிடும். இவர்களது நிலை, மாம்பழத் தோட்டத்திற்கு வாயில்காவலராய் இருப்பவரால் கைவிடப்பட்டவர் நிலை போன்றதுதான். இந்த நுண்ணிய ஞானச் செய்தியைத் திருமூலர், தோட்டத்து மாம் பழச் செய்தியில் வைத்து மிக அழகாக அருளியுள்ள இத்திருமந்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# "அறிவார் இல்லை"!

பாலகவி வயிநாகரம்
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
(தத்புருஷ தேசிகர்), தேவகோட்டை.

கருணைக் கடலாகிய சிவபெருமான், ஆன்மாக்களாகிய நம்மிடத்தில் வைத்திருக்கும் பேரன்புக்கும், அது காரணமாக அவர் நமக்குச் செய்து வரும் உதவிகளுக்கும் அளவே கிடையாது. அநாதி காலம் தொட்டு நம்முடன் அநந்நியமாகப் பற்றித் தொடர்ந்துவருகின்ற ஆணவ மலத்தில் நாம் அழுந்திக் கிடந்த நமது கேவல நிலைமையிலும், பின்னர் நமக்குச் சிறிது அறிவு விளக்கம் உண்டாவதற்குக் கிடைத்த தனுகரண, புவன, போகங்களுடன் கூடிய இப்போதைய நமது சகல நிலையிலும், இனி மும்மலங்களையும் கழித்துச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வு பெற இருக்கிற நமது சுத்த நிலையிலும் சிவபெருமானுடைய உதவியின்றி நாம் வாழுதலில்லை. இதனை "அவனை யகன் றெங்கின்றும்" என்று திருவருட்பயன் அறிவுறுத்துகின்றது.

இடையீடின்றி இறைவன் செய்து வருகின்ற உதவிகளை உயிர்கள்பெற்று இன்புறுகின்றன என்பதனோடு, அவ்வுதவியை

'திருக்கோயில்' ஆசிரியர் அனுமதி பெற்று இக்கட்டுரை பிரசுரிக்கப் படுகிறது.

(முன் பக்கத்தொடர்ச்சி)

திரத்தின் சுவையில் ஈடுபடுவோமாக.

"ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவம் சித்தியெல்லாம் பெற்றும் — குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல னம்மாந் தினம்."

— ஸ்ரீகுருஞானசம்பந்தர்.

யின்றி அவைகள் வாழுமாறில்லை என்பதும் நாம் நன்கு உணர வேண்டியனவாகும்.

"காட்டுவித்தா லாரொருவர் காணு தாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே"

என்ற திருத்தாண்டகப் பகுதியில் உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரண்டு வகைகளிலும் வைத்து "இறைவன் உதவுகிற பொழுது உயிர்களுக்கு எந்த நுகர்ச்சியும் அமையாது போகாது" என்பதனையும் 'அவ்வுதவி இல்லாதபொழுது எந்த நுகர்ச்சியையும் யாரும் பெற முடியாது' என்பதனையும் அப்பர் சுவாமிகள் அருளிச் செய்திருக்கின்றார்கள்.

காலவரம்பு செய்து காண முடியாத அநாதி வேளை தொடங்கி இன்றுவரை, இனி என்றுமே வேறு யாரும் செய்து தாமுடியாத பேருதவியை உயிர்களோடு ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் இருந்துகொண்டு ஆண்டவன் செய்து வருகின்றானென்பது, எவ்வாற்றானும் மறுக்க முடியாத உண்மையேயாயினும், அவ்வுண்மையை உணர்ந்து அவனது நல்லருட்டிறத்தை நினைந்து போற்றுகின்றவர்கள் எத்துணைப்பேர் இருக்கின்றார்கள்? இப்படியொரு வினாவை எழுப்பி விடை தேடுகின்றார் திருமூல தேவநாயனார்! அவர் கண்ட விடை, திருமந்திர மாலைக் கடவுள் வாழ்த்தின் எட்டாவது திருப்பாடலாக வெளிவருகின்றது. அந்தத் திருப்பாடல்,

"தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினு மீச னருளறி வாரில்லை
சேயினு நல்ல னணியனல் லன்பர்க்குத்
தாயினு நல்லன் தாழ்சடை யோனே"

என்பதாகும்.

பின் தாழ் சடையனாகிய பிறப்பில் பெருமான், ஆன்மாக்களுக்கு எத்துணை எளிவந்தவனாயிருந்தும், அவனது திருவருளை அறிகின்ற மதுகை அவ்வான்ம, வர்க்கத்தினராகிய நம்மிடத்துக் காணப்பெறவில்லையே என ஆசிரியர் இத்திருப் பாடலில் இரங்கிக் கூறுகின்றார்.

சிவபெருமானைச் "சர்வேசுவரன்" முதலிய பெயர்களை வைத்து வேதாகமங்கள் துதிக்கின்றன. அண்ட பேரண்டங்

களாக விரிந்திருக்கின்ற எல்லாப் புவனங்களுக்கும், அவை எல்லாவற்றிலும் வாழ்ந்து கொண்டிருக்கின்ற அனைத்துயிர்களுக்கும் அச்சிவபெருமானே முதற் பெருந்தலைவன். அவனது ஆணையைத் தாங்கி அண்டகோடிகள் அனைத்திலும் பல புண்ணியான்மாக்கள் இடைப்பட்ட தலைவர்களாய் இருந்து வருகின்றனர். அந்தத் தலைவர்கள் அனைவருக்கும் தலைவன் சிவபெருமான் என்பதை உணர்த்தவே அவனைச் "சர்வேசுவரன், பரமேசுவரன்', பரமபதி" முதலிய பெயர்களைவைத்து ஆன்றோர் அவனை அழைத்தனர்.

கண்டவர் எவரையும் அஞ்சி யொதுங்கச் செய்கின்ற தெறலும், அதற்குமாருக அவ்வனைவரையும் விரும்பி நெருங்கச் செய்கின்ற அன்பும் எவரிடமும் உள்ளனவோ; அவரே தலைவராயிருத்தற்குரிய தகுதியை உடையவராவர். தெறலொன்றேயுடையோரை எவரும் நெருங்குதற்கஞ்சுவர். அதனால் அவர்பாற்பெறும் பயன் தீமை விளைவிப்பதற் கேதுவாயிருக்கும். அஞ்சுதற்கும் அன்பு செய்தற்கும் ஏற்றவனுயிருக்கின்ற தலைவனே, அவன் கீழ் வாழ்பவர்களுக்குக் காலம் இடமாதியன அறிந்து கொடுப்பன கொடுத்துத் தடுப்பன தடுத்து உதவி செய்பவனுயிருக்க முடியும்.

தேவர்கோ அறியாத தேவ தேவனும், மூவர் கோனுய் நின்ற மூர்த்தியுமாகிய சிவபெருமான், தனக்கே யுரிய பெருந்தலைமையினுல் உயிர்களனைத்தும் பயனடைந்து இன்புறுதல் வேண்டுமென்று திருவுளங்கொண்டு வெப்பம், தட்பம் ஆகிய இரண்டு பண்புகளையும் உடையவனுயிருக்கின்ருன். அவனது வெப்பம், பாசச் சேர்க்கையால் உயிர்களுக்கு உண்டாகும் இடையூறுகளை எதிர்த்து நீக்கித் துணை செய்யும்: தட்பம், அங்ஙனம் இடையூறுகளிலிருந்து நீங்கிய ஆன்மாக்களைச் சிவானந்தத்தில் இன்புற நிறுத்தி வைத்துத் துணை செய்யும். இவ்வாறு ஒன்ருேடொன்று மாறுபட்ட இயல்புகளையுடைய வெப்ப தட்பங்களை இறைவன் மேற்கொள்ளுவதற்குக் காரணம், அவன் உயிர்கள் பால் வைத்துள்ள பெருங்கருணை ஒன்றேயாம்

நமது துன்ப நீக்கத்தில் திருவுளங்கொண்டு சிவபெருமான் செய்தருளுகின்ற மறக் கருணைச் செயல்களை அறுவை மருத்து

வரது மருத்துவத்தோடு ஒப்பிட்டு அருள் நூல்கள் கூறுகின்றன. ஆண்டவனது அறமும், மறமுமாகிய இருவகைக் கருணைச் செயல்களும் அவன் ஆன்மாக்களிடத்து வைத்த அன்பினாலேயே நிகழுகின்றன என்பதற்கு,

'அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை"

என்ற திருக்குறள் சான்று தருகின்றது.

"குற்றம் செய்வது உயிரியல்பு" என்று பெரியோர் கூறுவர். அக்குற்றத்தையே தொடர்ந்து செய்து வருபவர்களை, உயிரியல்புடையவர்கள் என்று சொல்லலாமே யன்றி, அவ்வுயிரினங்களில் மேம்பட்ட மனித இயல்புடையவரென்றோ, அவரினும் மேம்பட்ட சான்றாண்மையுடையவரென்றோ சொல்ல முடியாது. மனிதரிற் பெரும்பாலோர் உயிரியல்புடையவராகவே காணப்பெறுகின்றனர். அவரை மாக்கள் கீழோர், கயவர் முதலிய பெயர்களால் நூல்கள் குறிப்பிடுகின்றன. குற்றம் புரிவதிலிருந்தொழிந்து நன்மை புரிவதில் இவர்களுக்கு நாட்டம் உண்டாக வேண்டுமானால், அதற்கு உபாயம், இவர்களை அச்சுறுத்துவது ஒன்றே என்று

"அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாம் சிறிது"

என்ற திருக்குறளால் திருவள்ளுவர் பெருமான் உணர்த்தியருளினார்.

கீழ்மக்களைத் தண்டம் செய்து திருத்துவது உலகியலிற் காணப்பெறுவது. இறைவனும் அவரை அவ்வுபாயத்தினாலேயே திருத்தியருளுகின்றான். அங்ஙனம் அவன் கொடுக்குந் துன்பம் அநுபவ வேளையில் வருத்தம் தருவதாதல் பற்றியே அவனைத் "தீயினும் வெய்யன்" என ஆசிரியர் முதலிற் கூறியருளினார். துன்பாநுபவம் பெற்றுப் பக்குவமடைந்த உயிர்களுக்கு, அவ்வநுபவப் பயனாக ஆண்டவன் வழங்குவது, துன்பமே வலவாத பேரின்பப்பேறு. அதனால் துன்ப நீக்கத்தில் தீயினும் வெய்யனுமாகிநின்ற சிவபெருமான் இன்ப ஆக்கத்தில் புனலினும் தண்ணியனாக மாறிவிடுகின்றான், என்பது பின்னர் அறிவிக்கப்பெற்றது.

இங்ஙனம் வெப்பம் தட்பமாகிய இருவகை நிலைகளிலு மிருக்கும் இறைவன் எப்பொழுதும் உயிர்களுக்கு நல்லன செய்பவனாகவே இருக்கின்றான். சிவபெருமானுக்குரிய திருப்பெயர்களுள் ஒன்றாகிய "சங்கரன்" என்னும் திருநாமமும் அவனது நன்மையுண்மையை நமக்கு அறிவிப்பதாகும். தட்ப நிலையில் நின்று அநுக்கிரகம் செய்யும்போது இறைவன் நல்லவனென்பது எளிமையாகப் புலப்படுகிறது. வெப்ப நிலையில் நின்று நிக்கிரகம் செய்யும்பொழுது அவனை நல்லவனென்று எப்படிச் சொல்லமுடியுமென்று பலர் ஐயுறுகின்றார்கள். இவர்களுக்குச் சிவஞான சித்தியார்,

"நிக்கிர கங்கள் தானு நேசத்தா லீசன் செய்வ
தக்கிர மத்தாற் குற்ற மடித்துத் தீர்த்தச்சம் பண்ணி
இக்கிர மத்தினாலே யீண்டற மியற்றி டென்பன்
எக்கிர மத்தினாலு மிறைசெய லருளே யென்றும்

என்று தெளிவு தருகிறது. (தொடரும்)

---

(சென்ற இதழ் பக்கம் 268-ன் தொடர்ச்சி)

Tirunallaru is a railway station on the Mayuram-Peralam-Karaikal line. It can be reached easily by bus from Mayuram, Kumbakonam, Nagapattinam. Porayar and other places.

Pilgrims to Tirunallaru tie a knot on the Dharbha (sacred grass) planted in large quantity outside the sanctum sanctorum. Dharbha is the sthala-vriksha here.

Some people tear a leaf of it so that their worries may also be torn away by the grace of Dharbharanyeswarar and Saturn. The Nala-Thirtha will be richly illuminated at the time of the festival.

There is a statue of Nala and Damayanti in the middle of the tank in a small mantapam.

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## அடைக்கலப்பத்து

இனி, அடைக்கலப் பத்தாவன:

பொழிப்புரை யநுபூதி:- முற்பதிகத்தில் அருளிய போத வாசனை நீங்கி அருளாம் வகையை அன்பால் இன்புறத் திருவடிக் கீழ் அடைக்கலமாக வைத்திருப்பதான திருவருளின் பெருங்கருணையைத் துதித்தது. திருப்பா, கலிவிருத்தமாகத் திருப்பெருந்துறையில் ஓதியதெனக் காண்க.

**406.** திருவடி சேர்ந்தமையைக் கூறும் ( தி. - ன. ) :—

செழுக்க மலத் திரளனநின் சேவடி சேர்ந்தமைந்த
பழுத்த மனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்க ணுடைப்புன் குரம்பைப்பொல் லாக்கல்வி ஞானமிலா
அழுக்கு மனத்தடி யேனுடை யாயுன் அடைக்கலமே.

(இ - ள்). ஆண்டவனே! செந்தாமரைக் காடனைய தேவரீர் திருவடியை அநாதியே பரமுத்தி பெறுவதான திருவருள் பழுத்தளிந்த கருணைச் சீரடியார் அபேத வத்துவித வாழ்வான அடிமை இன்பம இம்மையே பெற்றோர்களே! யான் மறதியுற்ற பாவியான்; நானோ வெனில், மயிர்க்கால் தோறும் புழுச்சொரிவதான துச்சிலுடையனும், ஞானமுள கல்வியும் சிவஞான போதமும் பொருந்தாத மலபோத வாசனையுமுடைய மனதையுடைய அடியேனை, அநாதியே அடிமையாக வுடைய நாதா! தேவரீர் குஞ்சிதபாத சருவ வியாபகத்தில் வியாப்பியமாகஅடியேனைக்கருணை வைத்து இரட்சிக்க வேண்டுமென அருளியதைக் காண்க.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 13/- மேற்படி நூல் நிலயத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

# மதுரை, குற்றாலம், திருவாலங்காடு-திருவாதிரை நாள் பட்டர் படிக்காசு நிதி - முதற்பொருள் ரு. 3000/-

"குடதிசை யதனில் மருவு குற்றாலம்
கோதறு சித்திர சபையாம்
குற்றமில் குணக்கின் பழையனூர் மன்றம்
குலநவ ரத்நமன் றென்பர்
அடல்விடைப் பாகன் நெல்லையம் பதியில்
அம்பலம் தாம்பிர சபையாம்
ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமாம்
அணிதில்லைச் செம்பொனம் பலமே"

என்று விவரிக்கப்பெறும் பஞ்ச சபைகளுள் வெள்ளியம்பலம் /ரஜதசபை/ எனப்பெறும் மதுரையிலும், சித்திரசபை எனப்பெறும் திருக்குற்றாலத்திலும் இரததினசபை எனப்பெறும் வடதிருவாலங் காட்டிலும் ஆண்டுதோறும் மார்கழித் திருவாதிரை நாளில் நடராஜப் பெருமானுக்கு அபிஷேகம் செய்யும் சிவாச்சாரிய பட்டருக்குத் தலம் ஒன்றுக்கு ஒருவர் விதம் மூவர்க்கு மட்டும் படிக்காசு அளித்தற்பொருட்டு இத்தருமம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றுள்ளது. இது 'மதுரை, குற்றாலம், திருவாலங்காடு - திருவாதிரை நாள், பட்டர் படிக்காசு நிதி' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 3000/– /ரூபாய் மூவாயிரம்/ இது கும்பகோணம் கனரா பாங்கில் 7% வட்டி தரக்கூடிய நிலையான முதலீடாக முதலீடு செய்யப் பெற்றுள்ளது. பிக்சட் டிபாசிட் இரசீது நெ. 43–67–நெ. 5வருஷம்13–3–1967உ முதல் 12–3–1972உ முடிய – ரூ. 3000/– இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெற்று வரும்.

3. மார்கழித் திருவாதிரை நாளில் தில்லைக்கூத்தப் பெருமானுக்கு அபிஷேகப் பணியாற்றும் தில்லைவாழந்தணர் ஒருவருக்குச் சிதம்பரததிலும், அங்ஙனமே மார்கழித் திருவாதிரை நாளில் ஸ்ரீ மரகதநடராசருக்கு அபிஷேகப்பணியாற்றும் சிவாச்சார்ய பட்டர் ஒருவருக்கு உத்தரகோசமங்கையிலும், நம்மால் நிறுவப்பெற்ற தரும சாசனங்களின்படி திருவாதிரைப் படிக்காசு அளிக்கப்பெற்று வருகிறது. அங்ஙனமே மதுரையிலும் திருக்குற்றாலத்திலும், வடதிருவாலங்காட்டிலும் மார்கழித் திருவாதிரை நாளில நடராசப்பெருமானுக்குச் சிறப்பு அபிஷேகப் பூசனைப் பணியாற்றும் சிவாச்சாரிய பட்டருக்கு மட்டும், அதாவது தலம்

ஒன்றுக்கு ஒருவர் வீதம், அதாவது மதுரைப்பட்டர் ஒருவருக்கு ரூ. 50/-ம், திருக்குற்றாலச் சிவாச்சாரியர் ஒருவருக்கு ரூ 50/-ம், வடதிருவாலங்காட்டுச் சிவாச்சாரியர் ஒருவருக்கு ரூ. 50/-ம், ஆக ரூ. 150/-/ரூபாய் நூற்று ஐம்பது மட்டும்/ இம்முதற் பொருளினின்று ஆண்டு தோறும் வரும் வட்டிவருமானத் திலிருந்து செலவு செய்யப்பெறும்.

4. ஆண்டு தோறும் பெறக்கூடிய வட்டி வருமானத்தில் நிர்வாகச் செலவு போக எஞ்சியுள்ள தொகையே மேலே குறித்த வாறு படிக்காசுத் தொகை அளிக்கப்பயன்படுத்தப் பெறும். வட்டி வரவுக்கேற்ப மேற்படி படிக்காசுத் தொகை குறைக்கவும் கூட்டவும் பெறும். மேற்படி படிக்காசுத் தொகை அளித்தபிறகு தொகை எஞ்சியிருப்பின், அத் தொகையைக்கொண்டு நாம் குறிப்பிடும் ஒருநாளில் காஞ்சீபுரத்தில் சிவாச்சாரியார்களுக்கு விசேஷ அன்னம் பாலிப்பு நடத்தப் பெறும்.

5. மதுரை, திருக்குற்றாலம், வடதிருவாலங்காடு ஆகிய தலங்களில் மார்கழித் திருவாதிரை நாளில் அபிஷேகப்பணி யாற்றிய பிறகு, திருவாதிரை நாளில் அபிஷேகப்பணியாற்றிய தாக மேற்படி மூன்று சிவாச்சாரியபட்டர்களும் தத்தம் தலங் களின் தேவஸ்தான டிரஸ்டி அல்லது எக்சிகியூடிவ் ஆபீசரிட மிருந்து அத்தாட்சிபெற்று நமக்கு அனுப்பிக்கொண்டால் படிக் காசுத தொகை ரூ. 50/- வீதம் மேற்படி மூன்று சிவாச்சாரிய பட்டர்களுக்கும் மணியார்டர் அனுப்பப்பெறும். அவர்கள் தொகை பெற்றுக்கொண்டதும் பெற்றுக்கொண்ட தொகைக்கு இரசீது அனுப்பிக்கொள்ளவேண்டும்.

6. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் மாற்றி யமைக்கப் பெறமாட்டாது. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம் முதலீடு திரும்பி அளிக்கப்பெறின் அதிக வட்டிதரும் நிலையான முதலீடுகளிலோ அல்லது அரசியல் கடன்தாள்களிலோ முதலீடு செய்யப்பெறும்.

Tirupanandal
Dated 9-4-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 12-4-67 as No. 17 of 1967 of Book 4 volume 54, pages 7 to 10.